ஓம் · தத் · சத்.

பரப்பிரஹ்மணே நம:








ஸ்ரீமத் சாது ஆத்மானந்த ஸ்வாமிகள்.

53-2

உ

ஓம் தத் சத்.

பரப் பிரஹ்மணே நம:

# முகவுரை.

—:o:—

ஸ்ரீலஸ்ரீ ஜகத் குரு சங்கர பகவத் பாதாச்சாரி சுவாமி யவர்களுடைய திருவடிகளுக்கு வணக்கம்.

இந்நூல் பரசிவஞானத்தில் விருப்புடைய அறிஞர்கள் பிரதி தினமும் பாராயணஞ் செய்வதற்கு அனுகூலமாய்ச் சிவானுபவப் பேற்றை அடைந்த மஹாத்மாக்களின் அருமைத் திருவாக்குகளைப் பழைய பிரதிகளுக்கிணங்க ஒரே புத்தகமாகப் பேரறிஞர்களின் அனுமதியினாலும் பகவான் அருளாலும் திரட்டியது. முதல் பதிப்பு.

இதில் P. சுப்புலாபுரத்தின் வடபுரம் கோவில் கொண்டு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீலஸ்ரீ வைத்திய சிரோரத்ன ப. ச. இராமலிங்க சுவாமிகள் சரிதமும், மலையாளம் ஸ்ரீ மத்லாட சுவாமிகள் போட்ட பாட்டிற்கு பதவுரை விரிவுரைகளும் முக்கியம். இன்னும் அவர் வைத்திய தொழில் 5 தலைமுறையாக நடந்து வருகிறது. நகரத்தார்கள் திருப்பரங்குன்ற மடத்திலேயே எப்பவும் போல் வருகிறார்கள்.

இத்துடன் ஆத்மானந்த பாராயணத் திரட்டும் நிரூபிக்கப்பட்டிருக்கிறது, இதை தினந்தோறும் சிரவண மனனஞ் செய்தால் பாப சமூகங்கள் நாசமாகியும், நிதித்யாசனத்தால் தன்னாத்ம ஸாம்பிராஜ்யத்தையும் அடைவார்கள் என்பது நிச்சயம்.

இதில் சிற்சில குறைகளிருப்பின் அறிஞர்கள் அவற்றைத் திருத்தியமைத்துக்கொள்ளுமாறு மிகத் தாழ்மையுடன் வணங்கிக் கேட்டுக்கொள்கிறேன்.

இங்ஙனம்,

**ப. ச. ரா. ச. ஆத்மானந்த சுவாமி.**

உ

ஓம்-தத்-சத்.

பரப்பிரஹ்மணே நம:

ஆத்தனருட் சோதியா மலரடியை மனமலரில்
அமைத்து அஞ்ஞானம் போக்கி
ஆத்துமா னந்தனெனுந் புதியதிரு நாமமதை
அறுமுகன் சூட்ட வேற்று
ஆத்துமானந்த பாராயணத் திரட்டெனும்
அருநூ லியற்றி ஞான
ஆத்மாவாம் குரு யிராமலிங்கப் பெரியார்
அண்ணல் வரலாறுஞ் சொன்னார்.

ஸ்ரீ கோவிலூர் பரம்பரை
பொன்னம்பலம் சுவாமி அவர்களின் சகோதரர்

**M. சங்கிலி சேர்வை**

அப்பக்கரை

திருமங்கலம் தாலூகா

53-2

உ

ஓம்.தத்.சத்.
பரப்பிரஹ்மணே நம:

## எண்சீர் விருத்தம்.

பொன்னொளிரு பல்வளமும் பெருகச் செல்வம்
பொருந்து சுப்புலாபுரத்தின் வடபால் மேவி
மன்னுயிர்க ளனைத்தினுக்கும் பிறப்பால் வந்த
மனப்பிணிக்கும் உடல்பிணிக்கும் மருந்தாய் என்றும்
தன்மயமாய் விளங்குகின்ற இராமலிங்கர்
சரித்திரத்தை சிந்திக்கப் படிக்கக் கேட்க
நன்மைதரும் பெரும்பயனை நல்கும் இந்த
நானிலத்தோர் துன்பமெலாம் நலியுந் தானே
அன்னவர்தம் வழிவந்தே அறிவின் மிக்க
அத்துவித நிலையுணர்ந்த ஆத்மானந்தம்
என்னுமுயர் திருநாமம் படைத்த மேலோன்
இடைவிடா முயற்சியினல் எழுந்த நூலாம்
பன்னருஞ் சீர்பெரும் பதத்தைநல்க வல்ல
பாராயணத் திரட்டைப் படித்த பேர்கள்
மின்ஒளிர் செஞ்சடையான்றன் அன்பனுகி
மெய்ப்பொருள்சேர் முத்திநிலை பெறுவர் தாமே.

உயர்திரு ராமையா
திருக்குறள் அஷ்டாவதானி
சாலுச் சந்தை
திருமங்கலந் தாலூகா
மதுரை ஜில்லா.

உ

ஓம்-தத்-சத்.

பரப்பிரஹ்மணே நம:

அஞ்சுகரமுடைக் குஞ்சரந்தனைத்
தஞ்சமென்று நில் கொஞ்சமொன்றுமில்

## ஸ்ரீலஸ்ரீ ராமலிங்க சுவாமியின் திவ்ய சரித்திரம்

இவரின் ஜெனன பூமியானது பெருமை பொருந்திய பாண்டிய நாடாகிய மதுரையம்பதிக்குத் தெற்கில் தேவர்கள் வசிக்கும் தேவங்குறிச்சிமலையில் அக்கினீஸ்பரர் கோவில். கோமதியம்மன் முருகன் விநாயகர்களும், விஷ்ணு தீர்த்தம், ஆகாய தீர்த்தம், நதியூத்து, அரளியூத்து, ஈஸான தீர்த்தம் என்ற பலதீர்த்தங்கள் ஒருங்கே சேர்ந்த புண்ய க்ஷேத்திரத்திற்கு வடக்கே ஒண்ணரை மைல் தூரத்தில் P. சுப்புலாபுரம் என்ற சிறு கிராமக் குடி ரெட்டி வம்சத்தில் அப்பாச்சி சங்கம நாயக்கர் என்ற பெயரோடு கூடிய வான் புதல்வராவார்.

இவர் தாய் தந்தையர் செய்த தவப் பயனால் முருகனே வந்து உலக உபகாரத்தின் பொருட்டுத் தோன்றிய சித்து புருஷனாவார். இவரின் மகிமை கேட்க கேட்க ஆவல் உண்டாவதில் ஆச்சரியமில்லை. இவர் ஜெனனமாகும் காலம் இவரின் பெற்றோர்க்கு பார்வதி சமேதரும் விஷ்ணுவும் காக்ஷியளித்தனராம். ஆனதால் இவருக்கு சங்கர நாராயணர் என்று திருநாமம் சூட்டினார்கள். இவர் தோன்றி சுமார் 180

ஆண்டுகளாகும். இவர் பள்ளியில் கல்வி பயின்ற சிறு வயதிலேயே ஞானவான் போல மக்கள் கருதும் படி நடந்துகொண்டார். இவர் சிறு வயதிலேயே ஊரின் சுமார் அரை மைலுக்கு வடபுரமுள்ள பேயந் தோப்பு என்ற குளத்தின் கரை மீதிருந்த விநயகரை காலை மாலை போய் தவம் செய்யலானர். இவரின் நஞ்சை புஞ்சைகள் கோவிலுக்குப் போகும் வழியி லேயே ஒரு மைல் வரைக்கும் இருந்தது. ஆகையால் இவருக்கு பூமிபாலகனென்ற காரணப் பெயரும் இவ்வூர் மக்களால் வழங்கப்பட்டது. இவருக்கு 31 வது வயதில் விவாகம் செய்ய பெற்ருேர்கள் நிச் சயிக்க இவரும் பெற்ருேரின் கடமை தவராமல், சுப்பம்மாள் என்ற பெண்ணை சுப முகூர்த்தத்தில் மனைவியாக ஏற்று ரதியும் மதனும் போன்று அருந்ததி யும் வதிஷ்டரைப் போன்றும் வள்ளுவரும் வாசுகி போன்றும் திகழ்ந்து இல்லறம் நடாத்திவரும் நாளில், இவர்களின் தவப் பயனுல் மூன்று புதல்வரில் இரண்டு ஆண் ஒரு பெண்ணுமாக பெற்றெடுத்தனர். இவருக்கு 35-வது வயதில் வழக்கம் போல் ஷை கோவி லில் தவம் செய்து கொண்டிருக்கும் போது முருகனே தவவேடமாய் ஒரு சாதுவாக இவர் முன் தோன்ற உடனே இவர் எழுந்து சாஷ்டாங்க அஷ்டாங்க நமஸ் காரங்கள் செய்து, சுவாமியை உண்டியருந்த தன் இல்லத்திற்கு அழைக்க, சுவாமியானவர் எனக்கு உணவு வேண்டாம், ஆனுல் நின் தயவு வேண்டி நான் இங்குற்றேனென, சுவாமியை பாலாவது அருந்திவிட்டுப் போனுல்தான் எனக்கு மனம் நிம்மதி யாகுமென்று வீட்டிலிருந்து பாலை சீக்கிரம் கொண்டு

வந்து சுவாமியைப் பார்த்தார். தவ வேடம் தாங்கித் தோன்றிய சன்யாசியை காணுது இங்கும் அங்கும் நோக்கிஞர். சுவாமிகள் இவர் கண்ணுக்குத் தோன்றியவாரே, சுமார் ஒரு மைல் தூரம் இவருக்கு அகப்படாமல் மறைந்தார். மறையவே சங்கர நாராயணர். மனச் சோர்வுடன் தான் தவம் புரியும் விஞயகர் முன் வந்து உட்காரும் பக்கமாக தரையில் ஒரு மந்திரம் எழுதியிருந்தது. அதை முருகன் வேடம் தாங்கிவந்த சுவாமிதான் எழுதியிருக்கலாமென்று உத்தேசித்து அதை மனனம் செய்தார். இவ்வாறு ஒரு வருடம் செபம் செய்யும் சமயம் இவருக்கு வயது 36 முடிவடைந்தது. ஆகவே தத்துவம் 36-ம் கற்ருர் என்று சுற்றுக் கிராம மக்கள் போற்றிப் புகழ்ந்து வந்தார்கள்.

இதே சமயம் இவருக்கு அடுத்த வீட்டில் 100 வயது கொண்ட மயில் வாகன சுப்பா ரெட்டியார் என்ற ஒரு பெரியார் வைத்தியம் செய்துகொண்டிருந்தார். இவருக்கு ஒரே பெண் வாரீசு மட்டும் இருந்ததால் தனக்குப் பின்ஞல் இந்த வைத்திய சாஸ்திரங்களையெல்லாம் யாரிடம் கொடுத்தால் தர்ம சிந்தனையோடும் தயாள குணத்தோடும் வைத்தியம் செய்வார் என்று பலநாள் சிந்தித்துக் கொண்டிருந்த பெரியாருக்கு சங்கரநாராயணரின் பக்தியும் ஒழுக்கமும் பல கிராம மக்களால் புகழப்படுவதை தானும் பக்கத்து வீட்டிலிருந்து பார்த்தும் அந்த சங்கரநாராயணரிடமுள்ள பரோபகாரமான சிந்தனை உள்ள நல்ல சாதுத் தன்மையும் இவரிடமே ஒருங்கே அமைந்துள்ளது என்றும் இவரிடமே (ஒருங்கே) நாம் நினைத்தபடி இவ்வைத்திய

சாஸ்திரங்களை ஒப்படைத்தால் உலக மக்களுக்கு இவ ரால் சில நன்மை பயக்கலாமெனக் கருதி சுமார் அக் கால மதிப்பு ரூபாய் லக்ஷம் பெருமதியான வைத்திய சாஸ்திரங்களையும் ஆயுதங்களையும் அச்சமயம் அவரிட மிருந்த ஔஷதங்களையும் சங்கரநாராயணரிடமே கொடுத்துவிட்டு தனக்குத் தெரிந்த சில மந்திரங்களை யும் சொன்னதோடு மாதா மாதம் கார்த்திகைக்குச் சென்று திருப்பரங்குன்றம் முருகனை தெரிசித்து வந் தால் நீ செய்யப்போகும் வைத்தியம் நற்பலனை அளிக் குமென்றும் சொன்னார்கள். இதை சிரமேற்கொண்ட சங்கரநாராயணர் கார்த்திகை தவருமல் மாதந்தோறும் போய் திருப்பரங்குன்றத்திலும் 1, 2 நாள் தங்கி வைத் தியம் செய்யவும் துடங்கினர். நாளுக்கு நாள் வைத்தி யம் செய்யும் பேர் பரவியதோடு வைத்தியத்தில் பல நோயாளிகளிடம் அத்தாட்சி பெற்றும் புகழோடும் வாழ்ந்தார்கள். இம்மாதிரி 50 ஆண்டு காலம் வைத் தியம் செய்ததில் சுமார் 3000 ரூபாய் வரை சேமித்து வைத்தார்கள். இப்பண்டைக்கொண்டு தர்ம கைங்கரி யம் அதாவது கார்த்திகைக்குப் பொதுமக்கள் தங்கிப் போகவும், தான் 1, 2 நாள் தங்கி வைத்தியம் செய்யவும் கருதி திருப்பரங்குன்றமிருந்து, திருநெல்வேலி போகும் மெயின் ரோட்டுக்கு கீழ்புரம் மடம் கட்டுவ தற்கு முன்னமே சிறு மண்சுவர் வைத்து மேல் கூரை மேய்ந்து, சிலகாலம் வசித்து வந்தார்கள். இப்படி யிருக்க ஒரு சமயம் இரவில் முருகனே வந்து அசரீரி மார்க்கமாய் மடங்கட்டு முடிவு அடையுமென்று உத்திர விட இவ்விபரத்தை திருப்பரங்குன்றம் சுப்பிரமணிய முதலியார், இடும்ப பண்டாரம் 2 பேர்களிடம் தெரி

விக்கலானுர். இவர்கள் இருவரும் மடங்கட்டும் கைங் கரியத்தை தாங்களே உதவியாளராயிருந்து கட்டி முடிக்கிறேம் என்று முன்வந்தார்கள். அக்ஷணமே திருப்பரங்குன்றம் சுப்பையாக் கொத்தனுர் என்பவரை வரவழைத்து இப்போது இருக்கும் பாம்பலம்மன் சந் நிதிக்கும் முத்திருளாண்டி பிள்ளை வீட்டுக்கும் வடபுரம் அமைக்க நிச்சயித்து, தச்சு செய்து மடம் கட்டும் வேலைக்கு தலைமை தாங்கும்படி மேல் சொன்ன முத்திரு ளாண்டி பிள்ளையிடம் ரூ. 3000த்தையும் கொடுக்க, அவர் கல், செங்கல், சுண்ணும்பு, கடுக்காய்சார், கருப் பட்டிசார் முதலியன கலந்து கட்டிடம் நடந்துகொண்டு இருக்கும் சமயம், சிலநாட்களுக்கு முன் மதுரையிலி ருந்து ஒரு கலெக்டர் ஆபீஸ் கிளார்க்கு இவரிடம் வந்து மூலம், பவுந்திரம் என்ற நோயை சௌகரியம் செய்து கொண்டு போனவர், தன் எஜமானனுன கலெக்டரி டம் இச்செய்தியைச் சொல்லலானுர். அது கேட்ட கலெக்டர் அப்படியென்ருல் எனக்கும் உனக்கு ஏற் பட்ட மூல நோய் சங்கடம் செய்கிறது. கிளார்க்கைப் பார்த்து நானும் உன்போல் மூல நோயினுல் சங்கடப் படுகிறேன். அவரிடம் போகலாமா என்று கிளார்க் கிடம் கேட்டார். அதற்கு கிளார்க்கானவர் சங்கர நாராயணர் கார்த்திகைதோறும் திருப்பரங்குன்றம் வரு வார். அப்போது போய் காட்டலாம் என்று சொன் ஞர். சொல்லவே, கலெக்டர் அவர்கள் சங்கரநாராய ணர் அவர் கார்த்திகை வரும்வரை என்னுல் நோயை சகிக்க முடியாது. ஆகையால் நீ உடனே வைத்திய ரின் சொந்த ஊராகிய P. சுப்புலாபுரத்திற்கு குதிரையு டன் போய் கூப்பிட்டு வரும்படி கிளார்க்குக்கு கட்டளை

யிடவே கிளார்க் ஆனவர் வைத்தியரிடம் ஒருநாள் காலே சுமார் 8 மணிக்கு வந்து, தான் வந்த செய்தியை சொல்லலானுர். சங்கரநாராயண வைத்தியரும் அவர் கள் அழைப்புக்கு இணங்கி, கிளார்க்கை முன்னுல் போகும்படி அனுப்பிவிட்டு தனக்கு உதவியாளுடன் கால்நடையாகவே மதுரைக்கு இரவு சுமார் 7 மணிக்கு கலெக்டர் அவர்களிருக்கும் இடத்துக்குப் போய் தான் ஜெபிக்கும் வைத்திய மந்திரத்தால் மந்திரிக்க உடனே கலெக்டர் அவர்களின் நோய் வலியில்லாமல் சௌகரி யம் அடைய மறுநாளும் அவ்விடமே தங்கி, காலே களிம்பு தடவி மாலே 5 மணிக்கு களிம்பு தடவும் பாவனே யாய் ஆப்ரேஷனும் செய்து ஒரு வார காலத்துக்குள் சௌகரியம் செய்யவே கலெக்டர் அவர்களுக்கு வைத் தியரிடம் கொண்ட அன்பினுல் அவருக்கு சன்மான மாக கொஞ்சம் பணம் கொடுக்க வைத்தியர் உங்களின் தயவு இருந்தால் போதும் எனக்குப் பணம் வேண்டா மென்று மறுத்துவிட்டு கலெக்டர் அவர்களிடம் விடை பெற்றுக்கொண்டு கட்டிட வேலே நடக்கும் யிடமாகிய திருப்பரங்குன்றம் வந்து சேர்ந்தார். அடுத்த வாரம் கலெக்டர் அவர்கள் திருநெல்வேலி போவதற்கு குதிரை ஜட்காவில் அதே வழியாக வந்து இந்தக் கட் டிடம் யாரால் கட்டப்படுகிறது என்று வினவ, உடனே சங்கரநாராயணர் வைத்தியர்களால்தான் கட்டப்படுகி றது என்று நமஸ்காரம் செய்யவே கனம் கலெக்டர் அவர்கள் சந்தோஷப்பட்டு ஜட்காவை விட்டு கீழே இறங்கி கட்டிடத்தைப் பார்க்கலானுர். இதற்குள் அவ்விடமிருந்த இடும்ப பண்டாரம் எலுமிச்சம்பழம் சாருடன் சர்க்கரை கலந்த பானம் கொண்டு வந்து

கலெக்டர் அவர்களுக்கு கொடுத்தார். கொடுத்த பானத்தை சந்தோஷமாக ஏற்று சாப்பிட்டுவிட்டு, இக்கட்டிடம் எக்காரணமாகக் கட்டுகிறீர்கள் என்று வினவ, வைத்தியர் இவ்விடமிருந்துதான் வைத்தியம் செய்ய உத்தேசித்து துடங்கியுள்ளோம் என்று சொன்னர். இவ்வார்த்தையைக் கேட்ட கலெக்டர் இக்கட்டிடத்திற்கு தகுந்த உத்திரம், விட்டம், உங்களிடமுள்ளதா என்று கேட்க, முத்திருளாண்டி பிள்ளையும், சுப்பிரமணிய முதலியாரும் சேர்ந்து உங்களின் கிருபையிருந்தால் இதுமட்டுமல்ல, இன்னும் பெரிய கட்டிடமும் எளிதில் கட்டிவிடுவோமென்று பதிலளித்தார்கள். கலெக்டர் அப்படியானல் தாங்கள் அடுத்த மாதம் வந்து என்னை மதுரையில் சந்தியுங்கள் என்று சொல்லி திருநெல்வேலிக்குப் போய்விட்டார். கலெக்டர் அவர்கள் சொல்லிய நாளுக்குள் உடம்புக்குத் தென்பு கொடுப்பதும் மற்றும் சில நோய்களை வரவிடாமல் தடுக்கும் தன்மை வாய்ந்த பெரும் பல ஔஷதங்களால் தயாரிக்கப்பட்ட பூரணுதி லேகியம் செய்து கையில் எடுத்துக்கொண்டு முத்திருளாண்டி பிள்ளையையும் கூட்டிக்கொண்டு மதுரைக்கு கலெக்டர் அவர்களிடம் போனர்கள். அச்சமயம் இவர்கள் போகுமுன்பே கலெக்டர் அவர்கள் உசிலம்பட்டி முகாமிட்டு போயிருக்கிருர் என்ற விபரம் தெரிந்து இவருக்கும் உசிலம்பட்டி சுப்பிரமணிய நாடார் வீட்டிலும் மாணிக்க நாடார் வீட்டிலும் வைத்தியம் செய்யப் போகவேண்டி இருந்ததை முன்னிட்டு இவர்களும் உசிலம்பட்டிக்குப் போய் கலெக்டர் அவர்களை பார்ப்பதோடு மேல் சொன்ன இரண்டு வீட்டுக்கும் போய் பார்த்து விடலாம்

என்று உசிலம்பட்டிக்கு அவ்விடம் போனார்கள். அத்தினம் வைத்தியர் வருவார் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்ததோடு கனம் கலெக்டர் அவர்களிடமும் வைத்தியர் இன்று இவ்விடம் வருவதாக சொல்லியுள்ளார் என்று சுப்பிரமணிய நாடார் கலெக்டர் அவர்களிடம் சொல்ல, வைத்தியர் சங்கரநாராயணருக்கு இவ்விடமும் நல்ல புகழ் உள்ளதா என்று கலெக்டர் ஆச்சரியம் அடைந்து கொண்டிருக்கும் சமயம் கண்டபப்னயக்கனூர் ஜமீன்தார் அவர்கள் கலெக்டரிடம் வந்து மலையில் மரங்கள் குத்தகைக்கு விட்டவரிடம் பணம் வரவில்லை. அதை வசூல் செய்து சப்திக்கு ஆர்டர் வேணுமென்று கேட்டுக் கொண்டிருக்கும் சமயம் வைத்திய சங்கர நாராயணரும் சுப்பிரமணிய நாடாரும் கலெக்டரிடம் போனார்கள். கலெக்டர் வைத்தியரையே நமஸ்காரம் செய்து உட்காரச் சொன்னார். எங்கு இருந்து வருகிறீர் என்று கேட்டார். அதற்கு அவர் நேற்று தங்களைப் பார்க்க மதுரைக்குப் போனேம். தாங்கள் உசிலம்பட்டியிலிருப்பதாக கிளார்க்குகள் சொன்னார்கள். எனக்கும் இங்கு கேஸ் பார்க்கவேண்டி இருந்தது. அதையும் பார்த்துவிட்டு தங்களையும் பார்க்கலாமென்றும் வந்தேன் என்று சொன்னார். கையில் ஒரு சாடி வைத்திருந்தார். இது என்ன என்று கலெக்டர் கேட்டார்கள். வைத்தியர் தங்களுக்குத்தான் பூரணதிலேகியம் கொண்டு வந்திருக்கிறேன் என்றார். அதில் கொஞ்சம் இங்கு இருக்கிறவர் ஜமீன்தார் அவர்களுக்கும் கொடுங்கள் என்றார். வைத்தியர் கொடுத்தார். அதைச் சாப்பிட்டு ஜமீன்தார் நன்றாய் இருக்கிறதென்றார்.

உடனே கலெக்டர், வைத்தியர் அதிர்ஷ்டம். கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்ததுபோல் என்று சொல்வது உங்களுக்கே தகும் என்று சொன்னார். ஜமீன்தார் என்ன என்று கேட்டார். அதை கலெக்டர் ஜமீன்தாரிடம் அவர் ஒரு பெரிய கட்டிடம் திருப்பரங் குன்றத்தில் வைத்தியசாலை ஒன்று கட்டுகிறார். அதற்கு விட்டம் உத்திரம் நான் கொடுப்பதாகச் சொன்னேன். அது தாங்கள் வந்திருப்பதால் தங்கள் எஸ்டேட்டி லேயே கொடுக்கலாமா என்றார். அதற்கு ஜமீன்தார் ரொம்ப சந்தோஷமென்றார். உடனே இரண்டுபேரும் யோசித்து நல்ல மரங்கள் உள்ள எஸ்டேட்டில் 6 மாதம் வரை தங்களுக்கு வேண்டியமட்டும் உத்திரங் கள் வெட்டிக் கொள்வது என்று ஆர்டர் கொடுத்தார் கள். அதைப் பெற்றுக்கொண்டு சுப்பிரமணிய நாடா ரிடம் வந்து யோசித்து கண்டனூர் போகலாம் என் றார். அதற்கு அவர் இதைப்பற்றி உங்களுக்குக் கவலை வேண்டாம், வெட்டுவதற்கு என் பொறுப்பு என்றார். உடனே ஆட்கள் தயார் செய்து அவரே மரங்களை வெட்டவிட்டார். அதைத் தெரிந்து மாணிக்கநாடார் வண்டிகள் என் பொறுப்பு என்று சொல்லி ஒப்புக் கொண்டார். இதையெல்லாம் கலெக்டர் தெரிந்து ஆச்சரியப்பட்டு வைத்தியரைக் கூப்பிட்டு உங்கள் பெருமையை என்னவென்று சொல்வது என்றார். அப்போது வைத்தியர் கலெக்டரிடம் இது என் செய லல்ல. எனது குருநாதனாகிய மயில்வாகன சுப்பா ரெட்டியாருடைய புண்ணியம் என்றார். அப்படியே சொல்லிக்கொண்டு ஊருக்கு வந்து விட்டார்கள். சுப்பிரமணிய நாடார் ஆட்கள் தயார் செய்து வெட்டு

நடந்துகொண்டிருக்கும்போதே வண்டிகளும் மாணிக்க நாடார் தயார் செய்து ஒருமாத காலவரை மரங்கள் வெட்டி உசிலம்பட்டிக்கு வந்து சேர்ந்தது. பின் ஒரு நாள் சங்கரநாராயண வைத்தியரும் சுப்பிரமணிய முதலியாரும் திருப்பரங்குன்றத்திலிருந்து கார்த்திகை திருகண் வைத்துவிட்டு மறுநாள் மரம் வெட்டுகிறதைப் பார்ப்போமென்று உசிலம்பட்டி போய் கேட்டுக் கொண்டு கண்டப்பநாயக்கனூர் போய் மரம் வெட்டு கிற மலைக்கே போனார்கள். போய்க்கொண்டிருக்கை யில் மரம் வெட்டுகிறவர்கள் ஒரு பெரிய உத்திரம் வெட்டி கீழே தள்ளிவிட, மரம் இவர்கள் நேரில் வர, இவர்கள் விலக இடமில்லாமல் யோசித்து வைத்தியர் திடமாக குருநாதனை நினைத்து மயில்வாகன சுப்பா ரெட்டியாருக்கு அபயம் என்று கும்பிட்டுத் தியானம் செய்ய அந்த உத்திரம் ஒரு சிறு கல் தடுத்து நின்று விட்டது. மரம் வெட்டினவர்களும் பார்த்து பயந்து வந்து இப்படி தகவல் இல்லாமல் வரலாமா என்று கேட்க அவர் பயமில்லாமல் என் குருநாதனருள் இருக்கும் வரை ஒன்றும் ஆபத்து வராது என்றார். அதைப் பார்த்து அவர்கள் எல்லாரும் ஆச்சரியப்பட்டு கரகோஷம் செய்து சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து, விபூதி பிரசாதம் பெற்றுக்கொண்டு இவரைப் புகழ்ந்து துதித்துக்கொண்டு இன்னும் எந்த மரம் வேணுமோ சொல்லுங்கள் என்றார்கள். வைத்தியர் நன்றாய்ப் பார்த்து அவர்கள் கண்ணுக்குத் தெரியாத நல்ல மரங் களாய் காண்பிக்க ஆச்சரியப்பட்டு இவர் ஒரு கடவுள் தானப்பா, மனித உடல் தாங்கி வந்திருக்கிறார் என்று அதிசயித்தார்கள். ஆகையினால்தான் மலையாள லாட

சுவாமிகள் போட்ட பாட்டில்கூட நற்கீர்த்தியு தாரணி யில் எவர்களும் செப்புதற்குதாலு வருமோ என்று பாடியிருக்கிருர். இது மாத்திரமல்ல. இவர் புகழ் இன் னும் ஒரு விசித்திரமான செய்கை. மரங்கள் எல்லாம் வந்து சேர்ந்தது. ஒரு மடத்திற்குத்தான் கேட்டது உத்திரங்களும், விட்டங்களும், வந்ததோ நான்கு மடங்களுக்குக் காணும்படி வந்து சேர்ந்தது. இவர் ரூ. 3,000 அப்படியேயிருக்க கட்டிடம் கட்ட ஆட்களும் உதவியாய் வந்து வேலை செய்ய தெற்கு மடம் முடிந்து, வடக்கு மடமும் கட்டி முடிந்து நடுமய்யம் ஒரு பெரிய புளியமரமிருந்தது. அதை வெட்டிஞல் சேர்ந்தாப்போல் மூன்று மடமாகு மென்று. எல்லோரும் சொன்ஞர்கள். மரம் வெட்டுவ தற்கு எப்படி முடியுமென்று யோசித்தார்கள். முத்திரு ளாண்டி பிள்ளை கலெக்டர் உத்தரவு இருந்தால் வெட்டலாமென்ருர். சரி அவரிடம் போகலாமா என்று இரண்டுபேரும் மதுரையில் கலெக்டர் வீட்டுக்கே போஞர்கள். அவர் இவர்களைக் கண்டு வந்தஞே உப சாரம் செய்து வாருங்கள் என்று உபசரித்தார். என்ன வந்தது என்று கேட்கலாஞர். உடனே பிள்ளையவர் களே எழுந்து தங்களிடம் ஒரு உத்திரவு கேட்க வந்தோமென்ருர். அது விபரம் என்ன என்ருர். தங்கள் கிருபையால் தெற்கு மடமும் வடக்கு மடமும் முடிந்தது. தாங்கள் கொடுத்த உத்திரம் இன்னும் இரண்டு மடம் கட்டலாம். ஆஞல் இரண்டு மடத்திற்கும் மத்தியில் ஒரு புளிய மரம் இருக் கிறது. அதை வெட்டிஞல் மூன்று மடமும் ஒன்று போல் இருக்கும். அதற்குத் தான் தாங்கள் உத்திரவு

வேண்டும் என்றார்கள். கலெக்டர் அவர்கள் யோசித்து நான் அங்கு வந்து பார்த்து சொல்லுகிறேன். அது மெயின் ரோடு என்று சொல்லி விட்டார். பின்பு ஒரு நாள் வந்து பார்வையிட்டார். கட்டிடம் இரண்டு புறம் இருப்பதையும் மரம் இருப்பதையும் பார்த்து ஆச்சரியப்பட்டு இந்த வைத்தியர் ஒரு சித்து புருஷர் போல் தெரிகிறது என்று யோசித்து! வைத்தியரே நான் இதை சொல்ல அதிகாரம் இல்லை ஆனால் ஒரு யோசனை சொல்கிறேன். இந்த மரத்தை ஒரு வாரத் தில் வெட்டி மரம் உருப்படி இல்லாமலும் இடமும் தெரியாமல் செய்ய முடியுமா என்று கேட்டார். அதற்கு சங்கர நாராயணர் தைரியமாக அப்படியே செய்கிறேன் என்றார். கலெக்டர் அடுத்த மாதம் நான் திருநெல்வேலிக்கு கேம்ப் போகிறேன். வர பதினைந்து நாள் செல்லும் அதற்குள் மரத்தை வெட்டி காலி செய்து விடுங்கள் என்று சொல்லி திருநெல் வேலி போய் விட்டார்.

அதன் பின் வைத்தியர் ஆள்களை தயார் செய்து விளாச்சேரி, தனக்காங்குளம், தோப்பூர், கூத்தியார் குண்டு முதலிய ஊரிலுள்ளவர்களை வரச் சொல்லி மரத்தையும் வெட்டி அப்புறப்படுத்துவதுடன் விளாச் சேரியில் சுண்ணும்பு காளவாசலும், தனக்கங்குளம் கூத்தியார் குண்டில் செங்கல் காளவாசலும் போட்டு மரம் பஸ்பமாய் விட்டது. மரம் இருந்த இடமும் தெரியாமல் செய்து விட்டார்கள்.

திருநெல்வேலியிலிருந்து வரும் போது கலெக்டர் பார்த்தார். மரம் இருந்த இடமே தெரியவில்லை.

மதுரைக்கு போய் சங்கர நாராயணரை வரும்படிச் சொல்லி கலெக்டர் விசாரித்தார். வைத்தியர் திடத்துடன் இரவும் பகலுமாய் மரம் வெட்ட சுண்ணும்பு காளவாசலும் செங்கல் காளவாசலுமாக போட்டும் மரம் பஸ்பமாகிவிட்டது என்று சொன்னதைக் கேட்டதும் கலெக்டருக்கு அதிக சந்தோஷம் வந்து தாங்கள் செய்த பெருமைக்கு என் அன்பு பாராட்டவும், தங்களுக்குப் பரிசு வழங்கவும், மடம் கிரகப்பிரவேசச் செலவிற்கும் தயவு செய்து இந்த பவுன்களை வாங்கிக் கொள்ளவேண்டுமென்று ஒரு தட்டில் இருநூறு பவுன்களைக் கொடுத்தார்.

அதை முருகப் பிரிதி என்று வாங்கிக் கொண்டு வந்து நடுமடமும் கட்டி முடித்தார். பின் சமையல் மடமும் ரோட்டுக்கு மேற்குகட்டை மட்டம் கட்டி லாந்தாம விருந்தது. மரம் விட்டம் மீதியாயிருந்ததையும் ஊருக்கு கொண்டுவந்து தான் தங்குவதற்கும் மற்றவர்கள் தங்குவதற்கும் சீனிவாசப்பெருமாள் கோயில் முன்பாக ஒரு சாவடியும் கட்டி முடித்தார். திருப்பரங்குன்றம் மடத்தில் தைக் கார்த்திகைதோறும் தெப்ப உற்சவத்திற்கு் சாமி உச்சவமாகிவரும்போது திருக்கண் விசேஷமாக நடத்தி வந்தார். அதற்கு சின்னர் ரெட்டிபட்டி பெருமாள் நாயக்கரும் உதவி செய்து கூட இருந்து நடத்துவார்கள். இத் திருக்கண்ணுக்காகத் தான் தெற்கு மடம் கட்டினது. இத்திருக்கண்ணை யார் யார் விசேஷமாய் நடத்தி வருகிருர்களோ அவர்கள் குடும்பம் மேலும் மேலும் விருத்தியாகுமென்பது முருகனுடைய அனுக்கிரகமென்று நம்புங்கள். கிழக்குவாசல் இருக்கும் வடக்கு மடத்தில் சங்கரநாராயணராகிய

வைத்தியரே மாதாமாதம் வரும் உற்சவங்கள் தவறுமல் திருக்கண் வைப்பார். சில ஆண்டுக்குப் பின் தான் போகமுடியாமல் சின்ன மகனுகிய சங்கம ரெட்டியாரே போய்த் திருக்கண் செய்து வருவார். இப்படி இருக்க சங்கரநாராயணர்க்கு தெய்வத்தோடு ஐக்யமாகவும் சமாதிநிலை அடையவும் தன் சிஷ்யனுகிய வயிரமுத்து தேவரிடம் நான் ஐப்பசிமீ 17வ மிருகசீரிட நக்ஷத்திரத்திலும் அமரபக்ஷ சதுர்த்தியும் வியாழக்கிழமை கூடிய நன்னுளில் மாலை 4 மணிக்கு அடங்கப் போகிறேன் என்று பெரிய மனிதர்களுக்கெல்லாம் தகவல் சொல்லச் சொன்னுர். அதன்படியே வயிர முத்துத் தேவரும் உள்ளம் குளிர்ந்து பெரியோர்களுக்கெல்லாம் தகவல் சொன்னுர். சொன்னதைக் கேட்டு பெரியோர்களும் அதே சமயம் எல்லா ஜனங்களும் வந்து சுற்றம் சூழ முருகா முருகா என்ற சத்தத்தோடு அங்கு கூடி இருந்தார்கள். அவர் சொன்ன நாலு மணிக்கு வலக்கண்ணில் தண்ணீர் வடித்தார். அதை வயிர முத்துத் தேவர் துடைத்து ஏன் கண்ணில் தண்ணீர் வடிக்கிறீர்கள் என்று கேட்டார். அவர் என் சின்ன மகன் வரவேண்டுமென்று சொன்னுர். அப்போது சின்ன மகனுகிய சங்கம ரெட்டியார் வந்து என்னப்பா என்ருர். அதற்கு அவர் திருப்பரங்குன்றம் மேற்கு மடம் லாந்தாமலிருப்பதை லாந்திப் போடுகிறேன் என்று வலக்கை கொடு என்ருர். அப்படியே செய்கிறேன் என்று வலக்கை கொடுத்தார்.

உடனே முருகா முருகா என்ற ஒலியோடு பரம சாந்தி அடைந்தார். அங்கு கூடியவர்கள் கரகோஷம் செய்தார்கள். பின் மறுநாள் காலையில் சமாதி வைக்க

யோசித்து எந்த இடமென்று சிந்தித்தார்கள். அசரீரீ யாக அவர் தவம் செய்த பிள்ளையார் கோவில் முன்பே வையுங்கள் என்று சொல்லியதைக் கேட்டு எல்லா ரும் ஆச்சரியப்பட்டு அதே இடத்தில் குகை அமைத்து தேர் அலங்காரத்துடன் பேரன்மார்கள் முன்பின் வெண்சாமரை வீசவும் சங்கு சேகண்டி மேளதாளத்துடன் மறு நாள் மூன்று மணிக்கு சரீர அடக்கம் செய்தார்கள்.

பின் மண்டல பூசையும் விசேஷமாய் செய் தார்கள். மூன்ருவது மாதம் சமாதி அடங்கின இடத் தில் செங்களனீர் பூப் பூத்தது அதை பார்த்து சங்கம ரெட்டியாரும் அவர் தங்கை சுப்பம்மாளும் கட்டிடம் கட்ட முயற்சி செய்தார்கள். அதற்கு சங்கர நாரா யணரே தெரிசனையில் வந்து சங்கம ரெட்டியாரிடம் நீ எனக்கு கட்டிடம் கட்ட முடியாது என் பேரனுகிய சங்கர நாராயணன் தான் கட்டுவான். நீ திருப்பரங் குன்றம் மடத்தை கட்டு என்று சொல்லி விட்டார்.

பின் அவர் ஆயிர ரூபாய் சிலவில் மேல மடம் லாந்தி விட்டார். மடத்தையும் நன்ருய் கவனித்து வந்தார். மாதாமாதம் கார்த்திகை போய் திருக்கன் வைத்து தண்ணீர் தர்மமும் வைத்து நடத்தி வந்தார்.

அதற்குப் பின் சமாதியில் ஒரு திருனை கொரடு மட்டும் கட்டி பூசையும் குருபூஜையும் விமரிசையாய் செய்து வந்தார். பின் பேரனுகிய சங்கரநாருயணர் வைத்தியம் பார்க்க வந்துவிட்டார். வந்ததும் சிறு

வயதிலேயே அதாவது 20-வது வயதில் பூவாக்குஊரணியில் ராமக்கம்மாளிடம் பணம் வாங்கி ஒரு மடமும் கிணறும் கட்டி தண்ணீர் பந்தல் அமைத்தார்.



பின் மண்டபசாலை ரெட்டியபட்டியில் தன் அத்தையாகிய சுப்பம்மாளிடம் பதிஞயிரம் ரூபாயும் தன் ரூபாயுமாய்ப் போட்டு தன் பாட்டனாராகிய சமாதிக்கு கோவில் கல் மண்டபமாகக் கட்டி விநாயகர், நந்தி, தூபி முதலியதும் கட்டி காசிக்குப் போய் கங்கா தீர்த்தம் கொண்டுவந்து ஏர்விளம்பி வருஷம் ஆனி மாதம் 27 தேதிக்கு 15—7—1897 வருஷம் பேரையூர் சமஸ்தானம் தும்பிச்சி நாகைய சுவாமி துரை அவர்கள் தலைமையில் பேரையூர் சமஸ்தான வித்வாஞகிய மீஞக்ஷி சுந்தர கவிராயரால் அஷ்டாவிதானம் செய்து பல பிராமணர்களைக் கொண்டு சத் சாதுக்களைக் கொண்டு கும்பாபிஷேகம் ரொம்ப விமரிசையாகவும் செய்து லிங்கஸ்தாபிதம் செய்யப்பட்டது.

அதே சமயத்தில் வந்த பெரியோர்கள் உண்டியலும் நன்கொடையுமாகப் பணமும் கொடுத்தார்கள். கவிராயர் மகாராஜ ஸ்ரீல அவர்கள் நாகையசுவாமி துரை அவர்களைப் பார்த்து தாங்கள் செய்கிற நன்கொடை என்றும் அழியாமல் இருக்கும்படி செய்யவும் என்று சொன்ஞர்கள். துரை அவர்கள் அந்த வாக்கியத்தை கேட்டு யோசித்து ராமலிங்க சுவாமி கோவிலுக்கு எப்போதும் விளக்கு போடும்படியான எண்ணெக்குத் தகுந்த ஏழு இலுப்பை மரங்களும் புஷ்பம் போட இருபத்திஞலு செண்டு இடமும் நந்தவனத்திற்தாக சாரி செய்தார்.

பின் பூசை வைப்பதற்கு ராமசாமி அய்யரை நேமித்தார்கள். பூசை செய்த விபரம் பாட்டில் எழுதியிருக்கிறது. சங்கர நாராயண டாக்டர் திருப்பரங்குன்றம் மடத்தில் தகப்பனார் செய்தது போல் நடத்தி வடக்கு மடத்தில் ஒரு ரூம்பும் மேற்கு மடத்தில் ஒரு ரூம்பும் கட்டினார். திருக்கண்களும் விசேஷமாக நூறு ரூபாய் சிலவில் செய்து வந்தார்.

அவரும் பராபவ வருடம் புரட்டாசி மாதம் பூர்வ பக்ஷ அஷ்டமி திதியன்று சிவலோக பதவி அடைந்தார்.

பின் அவர் தம்பிகளாகிய ராமலிங்க ரெட்டியாரும் அப்பாக்ஷி ரெட்டியாரும் நடத்தி வந்தார்கள். பரிதாபி வருஷம் மாசி மாதம் பூர்வ பக்ஷ துவாதசி அன்று 7—3—1913 ராமலிங்க ரெட்டியார் சிவலோக பதவி அடைந்தார்.

பின் அப்பாக்ஷி ரெட்டியார் வைத்தியம் கற்றுக் கொள்ள வில்லை. அவர் ஒரு வேதாந்தியாயிருந்தார். பின் வாரீசுக்கு கூட தொழில் இல்லையே என்கிற எண்ணமும் கிடையாது. இப்படி இருக்கும் போது சிவகாசியிலிருந்து சின்னக் கருப்ப நாடார் என்பவர் முன்காலத்திலேயிருந்தே பரம்பரையாய் பி. சுப்புலாபுரத்திலேயே வந்து வைத்தியம் பார்த்துக் கொள்வது வழக்கம். மற்ற இடங்களில் பார்ப்பதில்லை என்று ஒரு பக்தியான நம்பிக்கை கொண்டவர்.

ஆனதால் அவர் மகனுக்கு கரப்பான் சீக்கு வந்து பார்ப்பதற்கு இங்கே வண்டி போட்டு வந்தார்.

இங்கே ஒருவரும் இல்லை வைத்தியம் பார்ப்பதற்கு என்றூர்கள். அவர் விசாரித்து அவர் குடும்பத்தில் யார் இருக்கிறூர் என்றூர். சிறு பையன்கள் 6 வயது இரண்டு வயதுள்ள பிள்ளைகள்தானிருக்கிறூர்கள்.

அப்பாச்சி ரெட்டியார் இருப்பதை தெரிந்து அப்பாச்சி ரெட்டியாரிடமே வந்து தாங்கள் தான் வைத்தியம் பார்க்கவேணும் என்றூர்கள். அவர் எனக்கு இத்தொழில் தெரியாது எனக்கும் வேண்டாம் என்று விட்டு விட்டேன்.

வேரு யாரிடமாவது பார்த்துக் கொள்ளுங்கள் என்றூர். சின்னக் கருப்ப நாடார் உங்கள் குலக் குருவை நினைத்து 'களிம்பு போடுங்கள் போதும் என்றூர். எனக்கு களிம்பும் செய்யத் தெரியாது அந்த மந்திரமும் தெரியாது என்றூர். நாடார் அப்பாச்சி ரெட்டியாரை விடவில்லை. எப்படியாவது பார்த்தால் தான் போவேன் என்று மூன்று நாள் வரை விடவில்லை. அவர் வீட்டுத் திண்ணையில் கூடவே இருந்தார்.

பிறகு அப்பாச்சி ரெட்டியாருக்கு ஒன்றும் தோன்ருமல் மனம் கவலைக்கிடமாயிருந்து என்ன செய்வது என்று யோசித்து மூணுவது நாள் ராத்திரி திண்ணையிலிருக்கும் பூசை அரையில், நாம் இனி உயிருடனிருப்பதை பார்க்கிலும் இறந்து போவது தான் உசிதம் என்று தீர்மானித்து கடகால் கயிற்றைக் கழற்றி தாவாரக் கம்பியில் மாட்டி கழுத்தில் சுருக்குப் போடப் போனுர். அதே சமயம் தன் குல குருவாகிய சங்கரநாராயணரே வந்து கையைப் பிடித்துக்கொண்டு

அருணகிரியார்க்கு முருகன் உபதேசம் சொன்னது போல் உனக்கு வைத்தியம் வரும். இந்தா களிம்பு மந்திரம் என்று உபதேசம் சொல்லவும், தைரியத் துடன் சுவாமிகளைத் ஸ்தோத்திரித்துக்கொண்டு விடியும் வரை இருந்தார். அப்படி இருக்கும் போதே காலை ஐந்து மணிக்கு முத்துலிங்கபுரம் சோணைகிரி நாடார் தற்செயலாய் கேள்விப்பட்டு சிவகாசி சின்னக்கருப்ப நாடார் வந்திருக்கிருர் அவர் அப்பாச்சி ரெட்டியாரை வற்புறுத்தி வைத்தியம் செய்யச் சொல்வதையும் தெரிந்து அப்பாச்சி ரெட்டியாரிடம் வந்து அய்யா நீங்கள் ஒன்றுக்கும் பயப்படவேண்டாம் நான் முன்னமேயே தங்கள் அண்ணனிடம் மருந்துகள் செய்யும் போது பார்த்திருக்கிறேன். கடையில் மருந்துகள் வாங்கியும் கொடுப்பேன். ஆதலால் தாங்கள் செய்ய வேண்டியதை எல்லாம் நான் விபரமாய்ச் சொல்லுகிறேன். இங்கு வந்திருக்கிற சின்னக்கருப்ப நாடார் நல்ல பணக்காரர். எவ்வளவு செலவு செய்தாலும் கொடுப்பார். நம் வைத்தியம்தவிர வேறு எங்கும் பார்க்க மாட்டார். எனக்கு முன்னமேயே தெரியும் என்று சொல்லவும் அப்பாச்சி ரெட்டியார் ராத்திரி கண்ட தெரிசனையை விபரமாய் சோணைகிரி நாடாரிடம் சொல்லவும் அதைக் கேட்டு அப்படியா அந்த ராமலிங்க சுவாமிகள் முன் அண்ணுவுக்கும் தெரிசனையில் வந்து சொன்னதும் கண்கூடாய் பார்த்திருக்கிறோம். உங்களுக்கு சொன்னதை பார்க்கவா வேணும். நான் இப்பவே சின்னகருப்ப நாடாரிடம் பணம் வாங்கி மதுரைக்குப் போய் மருந்துகள் வாங்கி வருகிறேன்.

தாங்கள் அவர் சொன்ன மந்திரத்தைச் சொல்லி நோயாளிக்கு மந்திரியுங்கள் என்று அருகம்புல் கொண்டுவந்து கொடுத்து மந்திரிக்கச் சொன்னர். வலி உடனே சவுக்கியம் ஆனது.

மருந்து வாங்கவும் மற்ற சாமான்கள் வாங்கவும் நூறு ரூபாய் சோணகிரி நாடார் வசம் சிவகாசி சின்ன கருப்பநாடார் கொடுத்தார். உடனே வாங்கிக்கொண்டு வந்து சோணகிரி நாடாரே களிம்பு மருந்து போட்டு அம்மியில் அரைத்துப் பக்குவமாய் அப்பாச்சி ரெட்டியாரை மந்திரித்து எடுக்கச் சொன்னர். மந்திரித்து எடுக்க பக்குவமாய் வந்துவிட்டது. நோயும் சவுகரியமானது.

பின் குருவாகிய ராமலிங்க சுவாமி கோவிலுக்கு பூசை செய்து களிம்பை போட்டு சவுகரியமான பின் சின்னக்கருப்பநாடார் கோவிலுக்குப் பூசை விமரிசையாய் அபிஷேக ஆராதனைகளுடன் 50 ரூபாய்க்குச் செய்யும்படி பூசாரியாகிய சங்குப் பிள்ளை அவர்களிடம் கொடுத்தார். அவர் விபரமாய் அர்ச்சனை முதலியது செய்து பிரசாதங்கள் கொடுத்தார்.

பின் அப்பாச்சி ரெட்டியாரை சின்னக்கருப்ப நாடார் தாங்கள் இன்னும் நன்ருய் வைத்தியத் தொழிலைப் பாருங்கள். நானும் பணம் அனுப்புகிறேன் என்று ஊருக்குப் போய் நூறு ரூபாய் அனுப்பி சில சாமான்களும் கொடுத்துவிட்டார்.

பின் சோணகிரி நாடாரையே கம்பவுண்டராக வைத்துக்கொண்டு வைத்தியத்தை பிரபலமாகப்

படித்து அப்பாச்சி ரெட்டியார் ஒரு வருஷத்தில் கியாதி பெற்று முன் பாட்டனார்போல ரொம்ப கியாதி யுடன் பி. சுப்புலாபுரத்தில் ஒரு ஆஸ்பத்திரியும் ஒரு பேட்டையும் வில்வண்டிகள் முதலியது வைத்து, கிராமங்களில் கம்பு வசூல் செய்து திருப்பரங்குன்றம் மடத்தில் தண்ணீர் தர்மம் பிரபல மாய் நடத்தினர்.

அப்படியிருக்கும்போதே மூத்த அண்ணன் மகனு கிய சங்கரநாராயணர், படித்து பதினைந்தாம் வயதி லேயே சிறிய தகப்பனரிடம் வந்து வைத்தியதொழில் பழகினர். அப்பாச்சி ரெட்டியாரும், ப. ச. ச. வுக்கு ஆப்ரேஷன் மருந்து செய்முறை மந்திரங்கள் முதலி யனவற்றை கற்றுக்கொடுத்தார். பின் அப்பாச்சி ரெட்டியார் திருப்பரங்குன்றத்திலேயே இருப்பாக இருந்துகொண்டார். அங்கேயே தொழில் பிரபலமாய் நடந்துவரும்போதே நம் மடத்திற்கு கன்னி மூலையில் அரசாங்க ஆஸ்பத்திரி ஏற்படுத்தினர்கள். அதில் நோயாளிகள் போவதில்லை. அப்பாச்சி ரெட்டியாரி டமேதான் நோயாளிகள் வருவார்கள். எந்த வியாதி யும் சவுக்கியமென்று கேள்விபட்ட டாக்டர் கவர்மெண் டுக்கு மதிப்பில்லையே என்று பொருமைப்பட்டு இவ் வூரில் ஆஸ்பத்திரி வேண்டாம். இங்கு ஒரு தமிழ் வைத்தியர் வருகிற நோயாளியைக் கூப்பிட்டு சவுக் கியப் படுத்துகிருர். ஆனல் இங்கு எனக்கு வேலை இல்லை. ஆனல் அவர் கரப்பன் மூலம் நோயை ஆப்ரேஷன் செய்து தெப்பத் தண்ணீரில் போட்டு அசுத்தம் செய்கிருர், ஆனதால் சுகாதார விதிக்கு

கெடுதல், அதே தெப்பத் தண்ணீரில் ஜனங்கள், மாடு முதலியதுகள் குளிக்கவும் சகல பழக்கங்கள் செய்வ தால் தொத்துநோய் உண்டாகும். இதை தர்ம எஜமா ஞகிய கலெக்டரவர்களும், ஜில்லா டாக்டரும் பார்த்து அந்த தமிழ் வைத்தியரைக் காலி செய்யவேண்டும். இல்லாவிட்டால் நம் ஆஸ்பத்திரியைக் காலிசெய்ய வேண்டும் என்று கேஸ் போட்டார்.

உடனே ஜில்லாக் கலெக்டரும், ஜில்லா டாக்ட ரும் வந்து பார்வையிட்டு, அப்பாச்சி ரெட்டியாரை கேள்விகள் பல கேட்டார்கள். இவ்வளவு பெரிய மடம் யார் கட்டினது எந்த வருமானத்தால் எவ்வ ளவு காலமாகும் என்ருர். அப்பாக்ஷி ரெட்டியார். இது மூன்று தலைமுறையாகும் வைத்தியம் செய்ததி ஞல் அதன் மூலமாய்த் தான், கட்டினது என்ருர். அப்படியாஞல் உன் ஆயுதங்கள் மருந்து எங்கே பார்ப்போம் என்ருர். வைத்தியர் உடனே காண் பித்து ஒரு மூல நோயாளியையும் நேரில் ஆப்ரேஷன் செய்து காட்டிஞர். அதைப் பார்த்து கலெக்டர் ஆச் சரியப்பட்டு வைத்தியரே ஆயிரம் பேரைக் கொன்ற வன் அரை வைத்தியன். அப்படி எத்தனை ஆயிரம் பேரை கொன்றீர்களென்ருர். உடனே அப்பாக்ஷி ரெட்டியார் திடத்துடன் இராமலிங்க சுவாமியை நினைத்து எஜமானவர்கள் சொல்வது அப்படியல்ல. ஆயிரம் வேரைக் கொன்றவன் அரை வைத்தியன். அப்படி எத்தனையோ ஆயிரம் வேரைக் கொன்று மருந்து செய்து இருக்கிறேன் என்ருர். ஜில்லா டாக்டர் அந்த மருந்து எங்கே பார்ப்போ

மென்ருர். உடனே வைத்தியர் காமரூபி லேகியத்தை எடுத்துக் கொடுத்தார். அதை கலெக்டரும், டாக்டரும் சாப்பிட்டுப் பார்த்து, பேஷ், பேஷ் என்று கையை பிடித்து குலுக்கி நன்ருய் இருக்கிறது பரம்பரை வைத்தியம் என்பது மிக நன்ருய் இருக்கிறது என்று இரண்டு பேரும் சர்ட்டிபிகேட் கொடுத்தார்கள். இந்த ஆஸ்பத்திரியையும் இங்கிலீஷ் மருந்தையும் நீங்களே பாருங்கள் என்ருர்கள். அப்பாக்ஷி ரெட்டியார் எனக்கு இங்கிலீசு தெரியாது. இதோ இருக்கிற பையன் ப. ச. ரா. சங்கரநாருயணன் இங்கிலீஷ் படிக்கிருன். அவன் வந்த பிறகு வாங்கிக் கொள்கிருேம் என்ருர். பின் கலெக்டர் சரி என்றும் சர்ட்டிபிகேட் புஸ்தகமும் போட்டுக் கொடுத்தார். அது இப்பவும் திருப்பரங்குன்றம் மடத்திலேயே இருக்கிறது.

மேலும் அப்பாக்ஷி ரெட்டியார் 2-ஆவது அண்ணன் மகனுகிய ப. ச. ரா. சங்கரநாருயணரை திருப்பரங்குன்றத்திலேயே படிக்கப் போட்டு வைத்தியம், ஆப்ரேஷன், வேதாந்த சாஸ்திரங்கள், தத்துவம், மந்திரங்கள் முதலியவைகளைக் கற்றுக் கொடுத்து, அவரிடத்திலேயே வைத்திருந்தார்.

பின் மேற்கு மடம் தாவாரம் புரம்போக்கில் தள்ளுபடியாக்கியதை சர்வே வந்த உடன் அதை 1000 ரூ. செலவு செய்து சர்வே கலெக்டர் நற்குண நாடார் காலத்தில் ஊர்சிதம் செய்து பின் சின்னமகனுகிய ப. ச. ரா. சங்கரநாருயணரை ஐயம்பாளையம்போய் பொன்னையா பிள்ளையிடம் மூங்கில், தர்ப்பை, வளை, கைகள் முதலிய சாமான்கள் கொண்டு வந்து மேச்சல்

போட்டு வண்டி நிற்க காடி காஞ ஓட்டடுக்குப் போட்டு ரூ. 1000 சிலவு செய்து வடக்கு மடம் கீழ் புரம் ஜன்னல் 2ம் ரூம் 2ம் தாழ்வாரக் கேட்டு முதலி யவைகள் ரூபாய்கள் 2000 சிலவில் செய்து வைத்தார் அங்கேயே 12ஷூம் இருந்தார்.

தைமீ திருகண் விமரிசையாய் ரூபாய் 300 சில வில் செய்து வந்தார். பின் மடத்திற்கு, நிலமும் வாங்கியிருந்தார். ப. ச. ரா. சங்கரநாருயணரை அங்கேயே நிறுத்திவிட்டு தொழில்கள் பூராவும் அவ ரிடம் ஒப்படைத்துவிட்டு, அப்பாக்ஷி ரெட்டியார் P. சுப்புலாபுரம் வரவும், குற்ருல சீசன் போகவுமாக இருந்து பின் அக்ஷய ஷூ அர்ப்பசி மீ இராமலிங்க சுவாமி கோவில் குரு பூசை அமரபட்ச சதுர்த்தி, மிருக சீரிஷ நக்ஷத்திரத்தில் விமரிசையாய் நடத்தி விட்டு இங்கேயே இருந்தார்.

பின் கார்த்திகை மீ தன் உடல் நிலை தளர்வதை யறிந்து, இரண்டு மக்களையும் கையைப் பிடித்துக் கொண்டு ஒத்து, இரண்டு பேரும் வைத்தியம் பாருங் கள். அண்ணன் சொல்படி தம்பியை நடக்கும்படி யும் தம்பியை கைவிடாமல் நீ காக்கவேண்டுமென்றும் பெண்டாட்டியாகிய நானம்மாளை, சொத்துக்கள் பூரா வும் நீ வைத்திருந்து கடைசியில், இரண்டு பேருக்கும் சமமாய் கொடுக்கவேண்டுமென்று உறுதி மொழி கூறி என்னிடமேயிருந்து தொழில் பார்த்து அதிகமாக சம் பாதித்து கொடுத்திருக்கிருர். என்று மூத்த மகனிடத் திலும், மனைவியிடத்திலும் கூறி சிறிது ரூ. ரொக்கமாக சின்னமகனுக்குக் கொடுத்தார். பின் எல்லாம் சமபாக

மென்று சொல்லி விட்டு சந்தோஷமாயிருந்தார். மக்கள் இரண்டு பேரும் அன்று முதல் ஒத்துப் பார்ப்பதுடன் தன் தகப்பனைக் காட்டிலும் பதின் மடங்கு அவர் மனம் போல் வேண்டியதையெல்லாம் வாங்கிக் கொடுத்து உபசரித்தார்கள். பின் அவர் கட்டிய ஆஸ்பத்திரியிலேயே சின்ன மகனுகிய சங்கர நாராயணன் கையைப் பிடித்துக் கொண்டு துளசி நீர் வாயில் ஊற்ற முருகா முருகா என்ற சப்தத்துடன் அக்ஷய ௵ கார்த்திகை மீ அமவாசை சதுர்த்தி 14-உ திங்கட் கிழமை 1916—12—4—ல் சிவகதி யடைந்தார்.

பிறகு அவருக்குச் செய்யவேண்டிய கர்மக் கிரியைகள் பூராவும் இரண்டு மக்களும் விமரிசையுடன் ஒத்து நடத்தினர்கள். வைத்தியமும் ஒத்துப் பார்த்தார்கள். திருப்பரங்குன்றம் மடத்தில் வரும் வைத்திய வரவை ப. ச. ரா. சங்கா நாருயணரே வைத்திருந்து தெற்கு மடம் பூராவும் சாந்து பூசிப் ரிப்பேரும் பார்த்ததில். 1250 ரூபாய் செலவழித்தார். பிறகு மேற்கு மடத்தில் தாழ்வாரம் போட P. சுப்புலாபுரம் கிராமத்தில், மடத்திற்காக வரிப் போட்ட ரூ. 100 வாங்கி தானும் 1000 ஆயிரம் கூடப் போட்டு தகரம் போட்டு ரூம்புகளும் கட்டி விட்டார். பின் நடு மடம் படிக்கல் எடுக்க எங்குரோஸ்மெண்டு வந்ததை ப. ச. ராமலிங்க ரெட்டியாரிடம் 500 ரூபாய் கொடுத்து மெட்ராஸ்போய் அதை ரத்து செய்தார். பின் 1945-ம் ௵ அண்ணுவாகிய ப. ச. ச. விடம் ஒப்புவித்துவிட்டார். அவரே பார்த்துவந்தார். திருகண்கள் சரியாய் தம்பியை வைத்தே 200 ரூபாய் செலவில் செய்து வந்தார்.

6–9-47 ஸர்வதாரி ஸூ ஆனி மீ பூர்வபட்ச திரயோதசி திதியன்று காலை 8 மணிக்கு ப. ச. சங்கர நாராயண டாக்டர் பரசிவகதியடைந்தார். பின் அவர் மகனுகிய சங்கர நாராயண டாக்டர் மேல்பார்த்து திருகண் முதலியவை விமரிசையாக நடத்தி வந்தார். ராமலிங்க சுவாமி குருபூசையும் மடமும் நன்ருய் கவனித்தார். ராமலிங்க சுவாமி கோவில் குருபூசைக்கு ஒரு ஏக்கர் நந்தவனமும் தினப் பூ சை வைக்க 65 செண்டு நிலம் பூசாரி வசமும் சின்னரெட்டிபட்டியில் இருக்கிறது. மண்டலப் பூசை முதலிய செலவிற்கு P. சுப்புலாபுரம் கிராமத்தில் கிணற்றுடன் 50 செண்டு நஞ்சைகளும் ப. ச. சங்கரநாராயணரே மேல்பார்த்து வருகிருர்.

ஸர்வதாரி ஸூ சித்திரை மாதம் 10-2-49 ப. ச. ரா. ச. தங்கை நித்தியானந்தம்மாள் மதிபேதகம்போல் பக்தி அதிகரித்து சுவாமி கோவில்களிலேயே அங்குமிங்குமாக ஓடித் திரிந்தார்கள். அதை நிவர்த்திக்க அண்ணுவாகிய ப. ச. ரா. சங்கரநாராயணர் தன் குல குருவாகிய ராமலிங்க சுவாமி கோவிலிலேயே ஒரு ரூம் கட்டி அதிலேயே தங்கவைத்து சாப்பாடும் ஊரிலிருந்தே கொடுத்துவிட்டார்கள். ஒரு மாதத்தில் பிரமை நீங்கி யோகப் பயிற்சியும் வேதாந்த பாடமும் நடத்தி வந்தார். அது சமயம் கோவிலை கவனித்து கொஞ்சம் ரிப்பேர் செய்ய அண்ணனிடம் சொன்னூர்கள். அவர் 500 ரூபாய்க்கு கிணறு பிளாட்பாரம் போட்டு திலா, தொட்டி முதலியது செய்து நந்தவனமும் ஏற்படுத்தினுர். தாயவர்களும் இரண்டாண்டு அங்கேயே தங்கி

தியான அப்பியாசம் செய்துவரும் நாளில் தன் சிறிய தாயாரை அடிக்கடி வந்து கோவிலுக்காக கொஞ்ச பணம் கேட்டார்கள். அதற்கு அந்த அம்மையாரும் கொடுப்பதாகச் சொன்னுர்கள். சில நாட்களில் மகஞ கிய ப. ச. ரா. ச. விடமும், ப. ச. ச. வாகிய பேரனிடமும் கோவிலுக்கு ஆயிரம் ரூபாய் கொடுக்கும்படி சொல்லிவிட்டு சர்வதாரி ஆண்டு ஆவணி மாதம் (8-8-48) திங்கட்கிழமை காலே 10 மணிக்கு ப. ச. அப்பாக்ஷி ரெட்டியார் மனைவி நானம்மாள் பரசிவ கதி யடைந்தார்.

பின் அதற்கு செய்ய வேண்டிய கிரியைகளை ப. ச. ரா. சங்கர நாருயணரே செய்தார். அந்த அம்மாள் சொன்ன பிரகாரம் இராமலிங்க சுவாமி கோவிலுக்கு ப. ச. சவும். ப. ச. ரா. சங்கரநாருயணரிடம் 1200 ரூ. கொடுத்தார். அதை அவர் இரண்டாயிரத்தி அய்நூருக பெருக்கி, கர வருஷம் 4—5—52-ல் கோவில் கட்ட ஆரம்பித்து அர்த்த மண்டபம், மகா மண்டபம் பிரித்து ஒரு கெஜம் சுண்ணும்பு காங்கிரேட் அரை கெஜம் கம்பிகள் போட்டு சிமிண்டு காங்கிரேட்டும் போட்டு மலேமேல் தூக்கிவைத்தது போல் கட்டி தூண், விக்கிரகம், ராசி விக்கிரகம் புதுப்பித்து, நந்தி புதிதாய் அடித்து வைத்து விட்டு பின் நந்தன ஹூ ஆனி மீ 23 உ 6—7—1952-ல் தானும் தங்கையாகிய நித்தியானந்தம்மாளும் காசி போய் கங்கா தீர்த்தம் கொண்டு வந்து மன்மத வருஷம் ஆனி 24 உ 8—7—55-ல் கும்பாபிஷேகமும் செய்தார்கள்.

பின் விசுவாவசு வருஷம் வைகாசி மாதம் 20தேதி புதன்கிழமை, புனர்ப்பூச நக்ஷத்திரத்தன்று 1965-6-2

ப. ச. ரா. ச. ஆத்மானந்தம் பிறந்த அறுபதாம்ஆண்டு விழாவுக்கு இரண்டாவது தடவை ஸ்ரீலஸ்ரீ நித்தியானந்தம்மாள், பா. கு. பாப்பி ரெட்டியாரும் காசிபோய் கொண்டு வந்த கங்கா தீர்த்தத்திற்கு லக்ஷார்ச்சனை செய்து, சர் சாதுக்களும் சிவ நாம கோஷ்டியுடன் கங்கா தீர்த்தத்தை ஸ்ரீலஸ்ரீ இராமலிங்க சுவாமிக்கும், விநாயகர், அரசமரம் முதலியதிற்கு அபிஷேக ஆரா ஆராதனைகள் செய்தும், சர் சாதுக்களுக்கு வஸ்திரமும் தெச்சிணையும் கொடுத்து தானும் கோ. வீர. ஸ்ரீ. லஸ்ரீ. அருணசலசுவாமிகள் போட்டாவை வைத்து குரு சொன்ன உபதேசத்தைச் சொல்லி சந்நியாசம் பெற்று காவியாடை தரித்துக் கொண்டார்.

ஆத்மானந்தசுவாமிகள் என்று திருநாமமும் கொண்டார்கள் வந்த மெய்யன்பர்களுக்கு சர்க்கரை பொங்கல் பஞ்சாமிர்தம் முதலியது வழங்கி மகேஸ்பர பூசை ரூ. 300 சிலவில் விமரிசையாக நடத்தினார்கள். இப்பவும் ப. ச. சங்கரநாராயண டாக்டர்தான் டிரஸ்டியாக இருந்து நடத்துகிறார். முன்னிருந்த ச. சங்கர பாண்டியம் பிள்ளை மகன் ராமய்யா பிள்ளைதான் பூசை நடத்தி வருகிறார். கோவிலில் எல்லா விஷயமும் நன்றாய் நடைபெற்று வருகிறது.

இச்சரித்திரத்தில் கண்டபடி விஷயங்களை கவனித்து நடப்பவர்கள் நீடூழி வாழ்வதுடன் சகல துன்பங்களும் நீங்கி சுகப் பிராப்தியுடன் மோட்சமடைவார்களென்பது வேத வாக்கியம்.

மேலும் ராமலிங்க சுவாமிகள் திருப்பரங்குன்றம் கட்டின மடங்கள் யார் யார் மேல்பார்த்தாலும் அவர்

முன் நடத்தியபடி தை, கார்த்திகை திருநாள் அன்று தெற்கு மடத்தில் திருக்கண் வைப்பதும் மற்ற மாதா மாதம் கிழக்கு வாசலில் திருக்கண் வைப்பது நன்ருய் செய்து வந்தால் மேலும் மேலும் குடும்ப விருத்தியும் அஷ்ட ஐஸ்வரியமும் உண்டாகுமென்பது நிச்சயம். இது முருகனுடைய அருள் வாக்கியம்.

P. சுப்புலாபுரம் வடக்கு இருக்கும் ராமலிங்க சுவாமி கோவிலே பூசிப்பவரும் பூசை செய்கிறவர்களும் அதை டிரஸ்டியாகப் பார்ப்பவர்களும் மேலும் மேலும் குடும்ப விருத்தியும் சகல ஐஸ்வரியங்களுமுண்டாகு மென்பது முருகன் அருள் கடாட்சம்.

இராமலிங்க சுவாமி பேரில்

மலேயான லாட சுவாமிகள் போட்ட பாட்டு.

அத்தி முகவனேமத்தன் மத லேயை
நித்தம் நினேப்பவர் முத்தி பெறுவரே

1) அண்டருந்துதி செய்யு மெஞ்ஞான ராமலிங்
கய்ய சற்குரு சாமிதன் அடிபணிந்தென்னும்
மெய்ஞான வாழ்வுபெறும் அதிபிரபல
யோகவான்

2) கண்டி தமாய் வரும் சகலவித நோயெல்லாம்
கண்டவுடன் ஓடிஒளிய கதிபெருகும் மணிமந்தர
அவிழ்தம் கொடுக்கின்ற காரண விநோத
குருவாய்

3) உண்டுண்டு நம்பினவர் எக்குடி வளந்தேறவே
உதவிசெய்யும் தர்மவான் உண்ணுதமருமலர்
கஞ்சாத வீமனும் உத்தண்ட கெம்பீரவான்

4) மண்டலம் புகழ வளர் சங்கம குபேரனருள்
வரத்தினிலுதித்த குமராமதியோசி யெனவந்த
சங்கரநாராயண வைத்திய சிரோரட்ணமே.

(பதவுரை) அண்டரும்=தேவரும். துதிசெய்யும்=போற்றுகின்ற. மெஞ்ஞான=உண்மைஞான. இராமலிங்கய்ய சற்குருசாமியை=சங்கரநாராயணருகிய சுவாமியை. அடிபணிந்து=பாதங்களைத் தொழுது. எந்நாளும்=சதாகாலமும். மெஞ்ஞான வாழ்வு பெறும்=சத்தியஞான வாழ்வைக் கொடுக்கின்ற.

அதி பிரபல யோகவான்=மிக கெம்பீரமுள்ள பாக்கியவான். கண்டிதமாய் வரும் = அவரவர் கன்மத்தால் வருகின்ற. சகலவித நோயெல்லாம்=குஷ்ட முதலிய கன்ம நோயெல்லாம். கண்டவுடன்=அவர் திஷ்டி பட்டவுடன் ஓடி ஒளிய=விட்டு நீங்கவும். கதிபெருகு மணி=ஓசைமிகுந்த மணி (இதன் விபரம் விரிவுரையில் காண்க) மந்திரம்=களிம்பு மந்திரமும் அமிழ்தம் மருந்துகளும். கொடுக்கின்ற=சீவர்களுக்கு தருகின்றவரும். காரண வினோத குருவாய் = அகத்தியருக்கு முருகனைப் போன்று உதவியவரும் எவ்வித வருமானத்தை விரும்பாதவரும். உண்டு உண்டு நம்பினவர்=மருந்துகள் சாப்பிட்டு உண்மையறிந்தவர்கள். எக்குடி வளர்ந்தேரவே=சங்கரநாராயண தேசிகரை அடைந்தவர் மேலு மேலும் விருத்தியாகவே. உதவி செய்யும் தர்மவான்=பிறர் என்ன கேட்டாலும் குடுக்கக் கூடிய தயாளுவும். உண்ணுத மருமலர்க் கஞ்சாத விமனும் =பசித்தவர் யார் வந்தாலும் அன்னமளிக்கும் சாமர்த்தியவான் உத்தண்ட கெம்பீரவான்=பலத்தில் அகஸ்

தியரைப் போன்றவர். மண்டலம் புகழ வளர் = எல்லா தேசத்திலும் பிரசித்தி பெற்றவர். சங்கமகுபேரனருள் = அப்பாக்ஷி வம்சத்தில் தோன்றியவர். வரத்தினிலுதித் தவா = தாய் தகப்பன் வரம் பெற்று சனித்தவா குமரா = என்றும் இளமையோடிருப்பவனே. மதியோகி யென வந்தா = அறிவே திரண்டு வந்த சங்கரநாரா யண வைத்திய சிரோரட்ணமே = சிவ விஷ்ணு அமிசம் பெற்று சிகிச்சை செய்யும் பண்டிதனே.

(விரிவுரை) சங்கரநாராயணராக அவதரித்து இராமலிங்க சுவாமியாக விளங்கிக் கொண்டிருப்பவரை தேவர்களும் போற்றுவார்கள். சத்தியஞானமுடைய வர். மிக பலம்பெற்றவர். கன்ம நோய்களெல்லாம் அவர் திருஷ்டி பட்ட மாத்திரத்தில் நீங்குமென்பது மணி என்பதன் அர்த்தத்தில் விளங்கும். கலியுகத்தில் இது மிக ஆச்சரியம். இராமலிங்க சுவாமிகள் பிறந்து சுமார் ஆண்டு தொன்னூறுக்கும். அடங்கி 30 ஆண்டுக்குப் பின் பேரனுகிய ப. ச. சங்கரநாராயணர் வைத்தியராக வந்து கோவில் கட்டி கும்பாபிஷேகம் செய்தபின் தினப்பூசை வைக்க ராமசாமி அய்யரை நிய மித்தார். அவர் ஓராண்டு வரை நன்ருய்ச் செய்தார். பின்பு அவர்கள் சுற்றத்தார்கள் தூஷித்தார்கள். நீ ஒரு பிராமணனுய் இருந்தும் சூத்திரர் சமாதிக்கு பூசை செய்யலாமா என்ருர்கள். அதற்கு ராமசாமி அய்யர் நான் சும்மா வீட்டில் ஒரு தனிகை போட்டு அப்படிப்போய் காட்டிவிட்டு வருவேன். இத னுலென்ன, நமக்கு வீடுகட்டிக் கொடுத்து வரும்படி நன்ருய் செய்கிருர் டாக்டர். ஆனதால் என் வாழ்க்

கைக்கு போதுமானதாய் இருக்கிறது என்று ஏழ்மை யாய் பேசுவதை டாக்டர் ஆஸ்பத்திரிக்குள்ளே இருந்து கேட்டுக்கொண்டார். உடனே ராமசாமி அய்யரைக் கூப்பிட்டு என்ன சொன்னுய் என்று கன்னத்தில் ஒரு அரை அறைந்து ஊரை விட்டு விரட்டி விட்டார். பின் மூன்று நாள் வரை கோவிலுக்கு பூசை வைக்க ஆள் கிடைக்கவில்லை. ப. ச. ச. டாக்டர் கவலையுடன் இருந்தார். மூன்ரும் நாள் ராத்திரியில் 3 மணிக்கு அவர் படுத்திருக்கும்போது தெரிசனையில் இராமலிங்க சுவாமிகளே வந்து சங்குப் பிள்ளையை பூசை வைக்கச் சொல் என்ருர். உடனே எழுந்து சுவாமி அவரை எப்படி பூசை வைக்கச் சொல்வது என்று சப்தம் போட்டார். அந்த சப்தத்தைக் கேட்ட காரைக்குடி முத்துவேல் செட்டியார் அங்கு படுத்திருந்தார். ஏன் இப்படி சப்தம் போடுகிறீர் என்று கேட்க டாக்டர் கண்ட தெரிசனையை விபரமாய் சொல்ல செட்டியார் அவர் எங்கு இருக்கிருர் என்ருர். டாக்டர் அவர் அடுத்த முத்திலிங்கபுரம். தீராத குஷ்டரோகி. கை, கால் கொள கொளத்து ரத்தம் வடிந்த வண்ணமாயிருக்கிருர். பூசை வைக்கவே யோக்கியதை யில்லாதவர் என்ருர். காரைக்குடி முத்துவேல் செட்டியார் தாங்கள் தெய்வத்தை நம்பவில்லையா? எந்த தெய்வமும் இப்படி வந்து சொல்லுமா? அதை நம்பி உடனே வரும்படி ஆள் அனுப்புங்கள் என்ருர். உடனே கூப்பிட்டு வந்தார்கள். சங்குப் பிள்ளை வந்து முன்னமேயே ஆஸ்பத்திரிக்கு வரப்படாது உனக்கு நோய் தீராது என்று சொல்லிவிட்டாரே என்று பயந்து வீதியில் நின்றுகொண்டிருந்தார். அதை முத்துவேல்

செட்டியாரவர்களே பார்த்து சங்குப் பிள்ளையை சும்மா உள்ளே வாங்க என்று கூப்பிட்டார். உடனே கையை துணியினால் மூடிக் கொண்டு உள்ளே போனார். சங்கர நாராயணர் டாக்டர் சங்குப் பிள்ளையைப் பார்த்து உங்களை பூசை வைக்கும்படி இராமலிங்க சுவாமிகள் என் தெரிசனையில் சொல்கிறார். ஆனதால் பூசை வையுங்கள் என்றார். நான் எப்படி பூசை வைப்பது, தளிகை போடுவது என்று சங்குப் பிள்ளை சொல்ல வும் அப்போது ஒரு பெண் பிள்ளை ஒண்ணுமிருந்தது. அதை பொங்கல் போடச் சொல்லி தண்ணிவிடச் சொல்லி நீ நேவேத்தியம் காட்டி வாருங்கள் பார்ப் போம் என்றார்கள். அதை நம்பி பயபக்தியுடன் ஒரு மண்டலம் வரை பூசை செய்து வந்தார்.

மூன்று நாளில் கை காலில் ரத்தம் வடிகிறது நின்று விட்டது. பின் வர வர புண்கள் ஆறி நகமும் முளைத்து விட்டது. அவர் அங்கேயே இரவும் பகலும் தங்கிவிட் டார். தெய்வத்தின் மகிமை என்ன என்று சொல்வது. முத்துவேல் செட்டியாரும் சங்குப் பிள்ளைக்கு வேண்டிய உதவி செய்தார். ப.ச.ச. டாக்டர் பாப்பினாயக்கன்பட்டி போய்வரும்போது சங்குப் பிள்ளை பூசை செய்துகொண் டிருந்தார். மணி சப்தம் கணார் கணார் என்று கேட்டது. உடனே மணி யார் இப்படி ஆட்டுவார்கள் பார்ப்போ மென்று வண்டியை கோவிலுக்கு விடச் சொன்னார். அங்கு போய் சங்குப்பிள்ளை பூசை வைப்பதையும் அவர் பக்தியாக பாடுவதையும் கேட்டு அவர் உடல் நிலையை யும் புண்கள் ஆறினதையும் பார்த்து ஆச்சரியப்பட்டு உங்களுக்குத் தெய்வம் துணை என்பது நல்ல விசேஷம்.

விடாதீர்கள். உங்களுக்கு மணி மந்திரம் எனக்கு களிம்பு மந்திரம் என்று சொல்லி விபூதி பிரசாதம் பெற்றுக்கொண்டு வந்துவிட்டார். தெய்வத்தின் மகிமை என்னவென்று சொல்லுவது. மிக ஆச்சரியப்பட்டு முத்துவேல் செட்டியாரும் பூசை வைப்பதற்கும் சாமான் களும் சங்குப் பிள்ளைக்கு கொடுத்து இரண்டாவது கல்யாணமும் செய்து வைத்தார். 2 ஆண் மக்களும் ஒரு பெண் பிள்ளையும் பெற்று குடும்பம் நாளுக்கு நாள் நல்ல விர்த்தியடைந்து வருகிறது. இப்பொழுதும் அவர் பேரனுகிய ச. ராமய்யா பிள்ளைதான் பூசை செய்துவருகிருர். நகரத்தார்கள் இப்பொழுதும் ரொம்ப நம்பிக்கையுடன் கோவிலுக்கு வந்து தீராத நோய்களை எல்லாம் தீர்த்துப் போகிருர்கள்.

பாட்டு.

(1) ஞர்னமும் பொருமையு நேயமும் கல்வியு
நல்ல
பெரியோ ரிணக்கமும் ஞாயமும் மேன்மையு
நாவினில் மறைகளு நல் விரத நோன்பு மாகி.

(2) தானமும் தருமமும் சத்திய விரதமு
தராதர மறிந்து
முறை செய்யும் நற் கீர்த்தியும் தாரணியில்
எவர்களு செப்புதர்க்குத் தாலு வருமோ

(3) ஊனுடம்பினில் வரும் வியாதிகள் யோடிட
உனது கைச் சித்து முறையும் உனது
ஜெனனப்
பலம் நினைத்தபடி முடியுமே இன்னெருவருக்கு
வருமோ

(4) மானிலம் புகழ வளர் சங்கம குபேரனருள்
வரத்தினி
லுதித்த குமரமதி யோகி யென வந்த சங்கர
நாரு
யண வைத்திய சிரோ ரத்தினமே.

(பதவுரை) ஞானமும்=அறிவும், பொறுமையும்= சாந்தமும், நேயமும்=வஸ்துவையும், கல்வியும்= வாசிப்பும், நல்ல பெரியோரிணக்கமும்=சன்மார்க்க சங்கமும், ஞாயமும்=ஒழுக்கமும், மேன்மையு= மேலான குணமும், நாவினில் மறைகளும்=வாக்கில் ரிக்-எசுர்-சாமம்-அதர்வணமென்னும் நான்கு வேதங் களும், நல் விரத நோன்புமாகி=கிரிச்சிர சாந்திராயண விரதாதிகளும், தானமும்=கேட்பவர்க்கு இல்லை என்று சொல்லாமல் பணம் கொடுத்துதவுதலும், தருமமும்= பசித்தவர் முகம் பார்த்து அன்னமிடுதலும், சத்திய விரதமும்=உண்மையான வைராக்கியமும், அறிந்து முறை செய்யும்=முறை தவருமல் யார் யாருக்கு எப்படிச் செய்ய வேணுமோ அப்படி செய்கிறவரும், நற்கீர்த்தியும்=தான் செய்த புகழும், தாரணியில்= உலகில். எவர்களும்=எக் குலத்தவர்களுக்கும், செப்பு தர்க்குத் தாலு வருமோ=சொல்லுதற்கு ஆயிர நாவை யுடைய ஆதிஷேசனு முடியுமா, ஊனுடம்பினில் வரும்=தூல சூட்சும உடம்பில் வியாதிகளும் (கன்ம நோயும்), எல்லாம் ஓடிட=விட்டு நீங்கும்படி, உனது கைசித்து=உனது கை விசேஷமும், முறையும்=சாஸ் திர முறைப்படி, உனது ஜெனனப் பலம்=நீ பிறந்த குடும்ப விசேஷமும், நினைத்தபடி முடியுமே=கோரியபடி

கைகூடுமே, இன்னொருவனுக்கு வருமோ=மற்றவர் களால் முடியுமோ, மாநிலம்=இப் பரதகண்டத்தில், புகழ வளர்=கீர்த்தி வாய்ந்த, சங்கம குபேரனருள்= அப்பாக்ஷி வம்சத்தில் பிறந்த, வரத்தினிலுத்த குமரா= முருகனுக அவதரித்தவா, மதியோகி யெனவந்த= புத்தியே திரண்டு வந்த, சங்கர நாருயண வைத்திய சிரோ ரத்தினமே=நோய்கள் போக்கும் ரு ம லி ங் க சுவாமியே.

(விரிவுரை) அறிவும் சத்துவ குணத்தையு வஸ்து வாகிய பிரமத்தையும் வாசித்தலும், சன்மார்க்க நெறி யும், ஒழுக்கமும் வாய்ந்தவரும், மேலான சுத்தமுடைய வரும், வாக்கில் ரிக்-எசுர்-சாமம்-அதர்வணமென்னும் நான்கு வேதங்களுடையவரும், கிரிச்சிர சாந்திராயண விரதமுடையவரும், கேட்பவர்களுக்கு இல்லை என்று சொல்லாமல் பணம் கொடுத்துதவுவரும், பசித்தவர் முகம் பார்த்து அன்னம் போடுபவரும், உண்மையான வைராக்கியமும், ஒழுக்கந்தவருமல் யார்யாருக்கு எப்படி உதவிசெய்ய வேணுமோ அப்படிச் செய்கிறவரும், தான் செய்த நிஷ் காமிய தர்மங்களை உலகில் எப்பேர் பட்டவர்களும் ஆச்சரியப்படும்படியும் சொல்வதற்கு ஆயிர நாவையுடைய ஆதிஷேசனுமுடியுமோ, சரீரத் திரயத்தில் வரும் கன்ம நோய்களெல்லாம் விட்டு விலகும்படி உன் கை விசேஷமும், சாஸ்திர முறை தவருமல் செய்முறைகளும் நினைத்த காரிய முடிக்கும் திறமையும் மற்றவர்ளால் முடியுமோர் இப் பரத கண்டத் தில் கீர்த்தி வாய்ந்த அப்பாக்ஷி வம்சத்தில் தோன்றி வரப் பிரசாதம் பெற்ற இருமலிங்க சுவாமியே சரணம், சரணம் ஓம் . தத் . சத்.

வாழி

சங்கரன் மாயன் வாழி சதுர் முகன் முருகன் வாழி
யைங்கரன் வாழி தேவரனைவரும் வாழி வாழி
இங்கித சரிதம் தன்னை யெழுதினோர் படித்தோர்
கேட்டோர்
பங்கமில்லாமல் அச் சிற்பதித்தவர் வாழி வாழி

உ

ஓம் · தத் · சத்.
பரப் பிரம்மனே நம:

**ஸ்ரீமத் ஆத்துமானந்த சுவாமிகள்**
**வரலாற்றுச் சுருக்கம்.**

ஐங்கரன் அறுமுகவன் அம்பிகை அருட்
குரவன் சங்கரன் சரஸ்வதியே காப்பு

அறுமுகக் கடவுள் அகத்திய முனிவருக்கு அன்புடன் அருளிய இயல்-இசை-நாடகம் என்னும் முத்தமிழ் முழங்கும் இந்நாட்டின் முதன்மையானதும் முத்துடை நாடென்று முதுமொழிப் பிராட்டியாரால் (ஒளவையாரால்) புகழப் பெற்றதும், சிவபெருமான் தமது அன்புடைய அடியவர்களுக்கு அநுக்கிரகஞ் செய்ய எண்ணி அறுபத்து நாலு (64) திருவிளையாடல் செய்தருளியது மாய தென் பாண்டி வளநாடென்னும் மதுரையம்பதிக்குத் தென் மேற்கிலுள்ள தேவன்குறிச்சிக்கருகில் மிகச் சிறப்புடன் கூடி விளங்கும் மூர்த்தி-தலம்-தீர்த்தம் மூன்றும் பொருந்திய ஸ்ரீ அக்கினீஸ்வரர் ஆலயத்தின் வடபாலுள்ள P. சுப்புலாபுரம் என்னும் சிற்றூரின்கண் சிறப்புமிக்க நற்குலத்தில் நான்கு தலைமுறையாக

பெருமையும் புகழும் கீர்த்தியும் பிரசித்தியும் வாய்ந்த அப்பாக்ஷி சங்கம குபேரனருள் வரப் பிரசாதத்தினுல் அவதரித்து குமார மதியோகியென வந்த சங்கர நாருயண ஆயுள் வைத்திய சிரோ ரத்தினமென்னும் பட்டப் பெயர் பூண்ட புகழ்மிக்க மரபில் மூன்ருவது தலைமுறையில் உதித்த ப.ச. இராமலிங்க ரெட்டியாருக்கு அவர் இல்லறவாழ்க்கையை நல்லறமாக நாள்தோறும் நடாத்த நன் மனைவியாக உடலுக்கு உயிர் போலும் கண்ணுக்கு இமை போலும் ஒத்த கருத்துடையவராய் வந்தமைந்த ஆவுடையம்மை என்பாரும் சேர்ந்து நாள்தோறும் நலம் பெறச் செய்த தபோ பலத்தினுலும் ஏழை எளியவர்கட்கு இடையருது அன்புடன் முகமலர்ந்து செய்து வந்த தான தருமாதிகளின் புண்ணிய மகிமையாலும் வந்து அவதரித்த சேய்கள் மூவரில் நடுப் பிறந்தவராவர் நமது ஆத்மானந்த சுவாமிகள்.

இவரை இவர் தாய் கருவுற்ற நாள் முதல் கடவுளைக் கருத்துடன் பிரார்த்தனை செய்து கடைசி நாள் வரை அதாவது ஐயிரண்டு திங்களும் பூர்த்தியாகி ஆவுடையம்மையவர்களுக்கு பரிபூரண கர்ப்பம் நிறைந்த போது காலையில் உதித்த கதிரவன் போல் நமது சுவாமியவர்கள் விசுவாவசு ஹூ வைகாசி மீ 24உ செவ்வாய்க்கிழமை பூர்வ பட்சம் திரிதிகை திதி புனர்பூச நட்க்ஷத்திரம் கடக லக்கினம் 6—6—1905ல் சுப நன்னுளில் ஜனனமானுர்கள்.

இவர் கதிர் ஒளி வீசிக் கதித்தெழும் கதிரவன்போல் கருப்பபை நீங்கிப் பிறந்தவுடன் இவரைச் சேர்ந்த

உற்ருர் உறவினர் சுற்றத்தவரும் வந்து கூடி இவரைக் கையிலேந்தி உச்சி முகந்து காணக் காணக் களிப்புமிக் கூறக் கருணை பாலித்து வந்தார்கள். இவ்வாருக இவரது பெற்ருேர்கள் செய்துவந்த தவ தரும தாஞதி புண்ணிய மகிமையால் இவர் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து ஆண்டு ஒன்று நிறைவுற்றவுடன் இவர் வடிவும் அழகும் குளிர்ந்த நகைப்புங் குணமுங் கண்டு இவர் முன் மரபில் தோன்றிய வைத்திய சிரோமணியாகிய ஸ்ரீலஸ்ரீ இராம லிங்க சுவாமியவரின் பிள்ளைத் திருநாமமாகிய சங்கர நாருயணரென்ற நாமம் பெற்ருேரும் மற்ற மெய்யன் பரும் இவருக்கு நாமம் சூட்டிஞர்கள். இவ்வண்ணம் சில ஆண்டு சென்ற பிறகு தன் பிதாவுடன் கூடவே யிருப்பார். ஐந்து வயது வந்தவுடன் பள்ளிக்கும் போவார். சாயந்திரம் வந்ததும் தன் பிதாவுடன் விநாயகர் கோவில் சென்று கற்பூர தீபம் காட்டி சுவாமி கும்பிட்டு வருவார்கள். இவர் சிறுவயதிலேயே தெய்வ பக்தியில் பிரியர் என்று எல்லோரும் சொல்வார்கள்.

6-ம் வயதில் தன் தந்தையார் வருமுன் கோவிலுக் குப் போய் கற்பூர தீபம் காட்டி தாய் தந்தைக்கு விபூதி கொண்டு வந்து கொடுப்பார். அதை தந்தையாகிய இருமலிங்க ரெட்டியார் பார்த்து சந்தோஷப்படுவார். அதை கூற்றுவன் பொருக்காமல் இவரை வேறுபடுத்த நினைத்து இவருக்கு ஏழாவது ஆண்டில் மகனை விட் டுப் பிரிய மனமில்லாமல் ஏங்கி ஏங்கி தன் உடல் மட் டும் இவ்வுலகில் இருக்க தான் செய்த புண்ணியம் தன்னைப் பற்றித் தொடர்ந்துவர பரிதாபி ஹு மாசி மீ

பூர்வ பட்ச துவாதசியன்று சனி வாரம் 3—3—1913 பர சிவகதியடைந்தார்கள்.

பின்பு தாய் தன் சிறிய தகப்பனுராகிய ப. ச. அப்பாக்ஷி ரெட்டியார் அநுசரணையில் இருந்து நன்ருய் படிப்பதும் காலை மாலை கோவில் போவதுமாய் இருப் பார். 13வது வயதில் திருப்பரங்குன்றம் போய் இங்கிலீஷ் 7வது வரை சிறிய தகப்பனுருடைய உதவி யினுலும் முயற்சியினுலும் படித்து பின் தன் தொழி லாகிய வைத்தியம் பார்க்க உதவியாக வைத்துக் கொண்டு இங்கிலீஸ் வேண்டாம் என்று வைத்திய சாஸ்திரமும் வேதாந்த சாஸ்திரமும் நா நா ஜீவ வாதக் கட்டளையும் பாடம் சொல்லி தத்துவார்த்தங்களையும் போதித்தார். மந்திர தந்திரங்களை சொல்லிவைத்தார். இவர் மேலும் மேலும் பக்தி பரவசருய் பிராணுயாம யோகாப்பியாசமும் செய்துவந்தார். பின் 16வது வயதில் இன்னும் தக்ககுரு வேண்டுமென்று தேடினுர்.

அப்பக்கரை கோவிலூர் பரம்பரை ஸ்ரீ பொன்னுச் சாமியவர்கள் சிறிதுநாள் பாடம் சொல்லிவந்தார்கள். பின் ஸ்ரீலஸ்ரீ கோ. வீர. பிரம்மசபை அருணுசல சுவாமிகள் முருகனைப் போலவே வந்து நீ ஒருவரிட மும் பாடம் கேட்கவேண்டாம். நானே பாடங்கள் சொல்லித் தருகிறேன் என்று வற்புறுத்தி உடனே அநுஷ்டான மந்திரமாகிய அங்கன்யாச கரன்யாசத் துடனும் சொல்லி நாநா ஜீவவாதக்கட்டளை குறிப்புரை திருவாரூர் கட்டளை வியாக்கியானம் பால போதம் விசாரசாகரம் கைவல்யம் முதலியது 18 வயதிற்குள் விபரமாய் சொல்லிவைத்தார்.

அன்று முதல் மிக்க பக்தி விசுவாசத்துடன் மோட்ச இச்சையில் தீவிரமாயிருந்தார். பின் 19வது வயதில் ஆனி மீ 24 உ P. சுப்புலாபுரத்தில் பெரிய உற்சவம் நடைபெற்றது. அதற்கு திருப்பரங் குன்றத்திலிருந்து அப்பாக்ஷி ரெட்டியாராகிய சிறிய தகப்பனர் வந்து உற்சவம் மிக்க விமரிசயுடன் நடத்த வேண்டுமென்று ப. ச. ச. பெரிய மகனும் ப. ச. ரா. ச. சின்ன மகனும் மூன்று பேர்களும் சேர்ந்து நடத்தி ஞர்கள். அப்போது சின்ன மகனே திருமணம் செய்து கொள் என்று அப்பாக்ஷி ரெட்டியார் வற்புறுத்திக் கேட் டார்.

அதற்கு ப. ச. ரா. ச. ஆத்மானந்த சுவாமிகள் வேண்டாமென்ருர். அதற்கு அப்பாக்ஷி ரெட்டியார் உன் குல குருவாகிய இருமலிங்க சுவாமி வந்து சொன்னல் செய்கிருயா என்று கேட்டார். அதற்கு சரி என்ருர்.

உடனே அன்று ராத்திரியில் ஆத்மானந்தர் தரிசனையில் வந்து அப்பாக்ஷி ரெட்டியாருக்குச் சொன்னதுபோல் வன்னிவேலம்பட்டி பா.லி.ந.மகோடி சாமியார் மகளை கொடுப்பார்கள். நீ திருமணம் செய்து கொள் என்று சொன்னர். அதை சிறிய தகப்பனரிடம் ப. ச. ரா. ச. சொன்னர். அதே பெண் கொடுக்கமுடி யாது என்று இருந்தது. அப்பாக்ஷி ரெட்டியாரும் யோசனை செய்து நாம் கேட்டுக் கேட்டு கொடுக்கமுடி யாத பெண்ணை சுவாமி சொல்லி இருக்கிருரே பார்ப் போம் என்று திடமாயிருந்தார்கள். உடனே மறுநாள் காலையில் பெண்ணினுடைய தாயார் வலியவந்து

பெண் கொடுக்கிறேன் என்று வ. மு. நாகம நாயக்க ரிடம் சொல்லிவிட்டார்கள். அதை வ. மு. நாகம நாயக்கர் அப்பாக்ஷி ரெட்டியாரிடம் சொன்னுர். அதை கேட்டு சந்தோஷமடைந்து நம் குல குருநாதன் நமக்கு உயிர் பிச்சை கொடுத்ததுபோல் இவனுக்கும் அனுக் கிரகம் செய்திருக்கிருர். இதை தாமதமில்லாமல் முடிக்க வேண்டும் என்று கருதி உடனே ஆனி மீ 27உ நல்ல நாள் என்று நிச்சய தாம்பூலம் செய்து ருத்ரோக்காரி ஹு ஆவணிமீ 3உ 1923ல் திருமணம் என்று சொல்லி திருப்பரங்குன்றம் போய் சகல சாமான்களும் தயார் செய்து கொண்டு வந்து ப. ச. ரா. ச. வுக்கும் பா. லி. ந. லக்ஷ்மியம்மாளுக்கும் சிறப்பாக சகல சம்பிரதாய வைபங்களுடன் மூன்று நாள் விசேஷமாக பெரியோர் கள் யாவரும் சூழ்ந்து திருமணம் நடைபெற்றது. அன்று முதல் கணவனும் மனைவியும் கருத்தொருமித் துக் கண்ணும் மணியும் போலும் நகமும் சதையும் போல உடலும் உயிரும் போல மனமொத்தவர் களாய் விருந்தோம்பல் விரதம், தானம், தருமம், தயை ஜீவகாருண்யம் பக்தி மிக்கவர்களாய் இல்லற வாழ்க் கையை நல்லறமாக நடாத்தி வந்தார்கள். அம்மை யவர்களும் தன் பர்த்தாவுக்கு அரசனுக்கு அமைச்சர் போலும். சேய்க்குத் தாய்போலும். தெய்வப் புலவர் திருவள்ளுவருக்கு வாய்த்த வாசுகி அம்மையவர்களைப் போலும், வசிஷ்டர் அருந்ததி போலும், அறுசுவை யடிசில் பாகம் செய்வதும், சொல் கடவாது நடப்பது மாய் அன்புடன் உதவியாக சில நன் மக்களைப்பெற்று அவர்களுக்கு காது குத்தல், முடியெடுக்க இராமேஸ் வரம் முதல் கன்னியாகுமரி வரை பஞ்ச சபை,

பஞ்ச மூர்த்திகள் பஞ்சலிங்கம், ஆறுபடை வீடாகியதும் தம்பதி சமேதராய் யாத்திரை செய்தும் பின் நந்தன வருஷம் வைகாசி மீ 23 ௳ 6—7—52ல் ஸ்ரீலஸ்ரீ கோ. வீர. பிரம்மசபை அருணாசல சுவாமிகள் சொல்படி தன் தங்கையாகிய நித்தியானந்தம்மாளும் தானும் காசி யாத்திரை செய்து வந்தார்கள். வரும் போதே திருவாரூர் ஸ்ரீலஸ்ரீ சண்முகானந்த சுவாமிக்கும் திருக்களர் தன் குருநாதருக்கும் கங்கா தீர்த்தம் கொடுத்து தெரிசனை செய்துவிட்டு வந்தார்கள். குற்றுலம், பாபநாசம், சீசன் தவருமல் தம்பதி சமேதராய் போவார்கள். பின் நான்கு புத்திரிகளையும் திருமணம் செய்வித்து ஒன்று போல் சீர் வரிசை சிறப்பாகக் கொடுத்து, பேரன் பேத்திமார்களையும் பார்த்து சந்தோஷத்துடன் 36 ஆண்டு வரை இருந்து வாழ்க்கை இனிது நடாத்தி வந்தார்கள்.

இவர்கள் வாழ்க்கையில் பொருமையுற்ற கூற்றுவன் இவர்களைப் பிரிக்கச் சதி செய்தான் போலும். சுவாமி அவர்களை இவ்வுலகில் தனியே விடுத்து குறுகிய காலத்தில் கணவனைப் பிரிந்து இவ்வுடலாகிய தூல சரீரத்தை விட்டு யாதனுசரீரியாய் சார்வரி வருஷம் பங்குனி மீ 30௳ 12—4—1961-ல் புண்ணிய லோகமாகிய பரலோக மடைந்தார்கள்.

அம்மையவர்கள் பிரிந்த வியாகூலத்தினுல் எவ்விதம் வாழ்க்கை நடத்துவது என்று ஒன்றும் புரியாதவராய் ஓராண்டு காலம் தெய்வ சிந்தனையோடு கூடி அன்ன ஆகாரமின்றி அவாவறுத்து விரதம் மௌனம் அடக்

கம் ஒடுக்கம் பொருமை முதலிய உயர் குணங்கள் நிறையப் பெற்று வாழ்ந்து வருபவராயினர்.

பின் பிலவ வருஷம் பங்குனி மீ 5தேதி 6—3—62 -ல் ஸ்ரீ நித்தியானந்தம்மாள் ஞான சொரூபியாய் தூத்துக்குடியிலிருந்து மதுரையில் மரகதம்மாளிட மிருந்துகொண்டு அண்ணனே வரும்படி சொல்லிவிட் டார்கள். சுவாமியுடனே புறப்பட்டு மதுரை போய் ஒரு நாள் தங்கி தன் தங்கையாகிய நித்தியானந்தம்மாள் பல காட்சிகள் யளித்து மாலே 5 மணிக்கு வற்புறுத்தி அண்ணனே குற்ருலம் போவோம் என்ருர்கள். அதற்கு அவரும் கூடவே போனுர். ரயிலும் தாமதித்து 7 மணிக்கு வந்தது. தென்காசிக்கு ரயில் 12 மணிக்கு போனது. வண்டியை விட்டு இறங்கினுர்கள். நித்தியானந்தம்மாள் மட மட வென்று ஒரு கண் தெரியாத கருப்பாயி அம்மாளே கூப்பிட்டு உனக்கு இன்று கண் தெரியும். நீயே வந்து கதவை திற. நான்தான் நித்தியானந்தம்மாள் என்ருர் கள். உடனே கருப்பாயி அம்மாள் ஈஸ்வரி நீயே எனக்கு கண் கொடுத்தாய் என்று நமஸ்காரம் செய் தார்கள். அதை ஆத்மானந்த சுவாமிகளும் தெய்வானே அம்மாளும் பார்த்து ஆச்சரியப்பட்டார்கள். உடனே தாயவர்கள் அண்ணனேப் பார்த்து இனியாவது என் சொல் கேள் என்ருர்கள். அவரும் சரி என்ருர். பின் பி. ஏ. பி. எல். சொக்கலிங்கம் பிள்ளேயவர்கள் வீட்டிற் குப் போய் அண்ணுவை நீ இங்கு படுத்திரு. உனக்கு முருகன் தெரிசனேயில் வருவார். வந்தால் நான் சொன்னபடி நடக்கவேண்டுமென்ருர்கள். அப்படியே

ஆகட்டுமென்றூர். பின் ராத்திரி 3 மணிக்கு சுவாமிகள் தெரிசனேயில் பழநியாண்டவர்போல் வந்து தலேமாட்டில் நின்றுகொண்டு ஆத்மானந்தம் என்று கூப்பிட்டார்கள். உடனே எழுந்திருந்து நமஸ்காரம் செய்தார். என்ன சுவாமி என்றூர். நாளேக்கு குற்ருலம் வரவும் என்று சொல்லிவிட்டு மறைந்தார். உடனே சுவாமிகளும் எப்படியும் என்று தோத்திரம் செய்து கொண்டே இருந்தார். காலேக்கடன் முடித்து இருக்கும்போது ஸ்ரீ நித்தியானந்தம்மாள் வந்தார்கள். வந்து இங்கு இருக்கும் சுவாமி அம்மாள் எல்லா தேவதைகளுக்கும் தேங்காய், பழம், கற்பூரம் முதலியவை வாங்கி அர்ச்சனே 15 ரூபாய் செலவழிக்கச் சொன்னூர்கள்.

பின் தான் நோட்டில் எழுதிவைத்திருந்த ஞானனுபூதி புஸ்தகத்தை படிக்கச் சொன்னூர்கள். மணி 12 ஆகிவிட்டது. உடனே குற்ருலம் வந்தார்கள். தாய் கோவிலுக்குள்ளேயே இரவு பூராவும் இருந்து காலே 4 மணிக்கு வந்து அண்ணுவை எழுப்பி இன்று திங்கட்கிழமை. குற்ருலநாதர், குழல்வாய் மொழி, பராசக்தி பீடம் எல்லா தேவதைக்கும் அர்ச்சனேகள் செய்தும் முருகன் சன்னதியில் சந்நியாசம் பெற்றுக்கொள் என்றூர்கள். அவரும் சந்தோஷத்துடன் எழுந்து காலேக்கடனே முடித்து சாமான்கள் பூராவும் வாங்கி தயார் செய்தார். பின் எல்லோரும் சுவாமிகளுக்கு அபிஷேக ஆராதனே செய்து. குற்ருல முருகன் சன்னிதியில் பிலவ ஹூ. பங்குனிமீ 3உ 1962-3-16ல் ஸ்ரீநித்தியானந்தம்மாளே, சந்நியாசம் கொடுத்து

ஆத்மானந்தம் என்று நாமமுமிட்டார்கள். இது ஒரு அதிசயமான நிகழ்சி. ஆச்சரியமான விஷயம் இக் கலிகாலத்தில். இப்படி தெரிசனைகள் கிடைப்பது அரிது. இது குருநாதனுகிய ஸ்ரீலஸ்ரீ கோ. வீர. பிரம்ம சபை அருணுசல சுவாமிகளுடைய புண்ணியமென்றே நினைக்கத்தக்கது. பின் ஆத்மானந்த சுவாமியவர்கள் 10 நாள் அங்கேயே தங்கிவிட்டு முதல் படை வீடாகிய திருப்பறங்குன்றம் வந்து சுவாமி தெரிசனை செய்துவிட்டு P. சுப்புலாபுரம் வந்து எப்பவும்போல் சங்கர ஜெயந்தியும் ஆண்டுவிழாவும் நடத்திவிட்டு தன் இருப்பிடம் விட்டு மறுபடியும் யாத்திரை செய்து கொண்டே வந்தார். நாகலாபுர புதூரில். அத்து விதானந்த சுவாமிகளிடமிருக்க அங்கு திருக்களர். ஸ்ரீலஸ்ரீ கோ. வீரப்பஞான தேசிகர் 50-வது ஆண்டு குருபூசை. வெள்ளி விழா பத்திரிக்கை வர. அதைப் பார்த்து உடனே மதுரை வந்து பூரணனந்த சுவாமி நித்தியானந்த சுவாமியுடனும் கூட திருக்களர் போய் வெள்ளி விழா பார்த்து கொஞ்சநாள் தங்கி குருசேவை செய்தும் பின் வேதாரண்யம் முதலிய இடங்கள் சென்றும் இன்னும் யாத்திரையில் பிரியர் காசியி லிருந்து கன்னியாகுமாரி வரை மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய் பார்த்ததில் 15000 ரூ. வரை சிலவழித்திருப் பார். குருசொன்னபடி சங்கர ஜெயந்தி 18 ஆண்டு நடத்தி இருக்கிறுர். சாதுக்களிடம்பிரியமுள்ளவர் யார் வந்தாலும் நல்லது செய்வார். அவரவர்கட்டுதக்கபடி நடத்துவார். சன்மார்க்க சங்கத்தை விடாமல் நித்தியா னந்தம்மாள் மனம் போல் நடத்திவருகிறுர். அந்தர்

யோகமும் நடத்தி வருகிறார். தினம் வேதாந்தபாடம் நடத்திவருகிறார். பழய மடம் கோவில் கிணறுகள் ரிப்பேர் செய்து வீடும் கட்டியிருக்கிறார். விசுவாவசுஙூ வைகாசிமீ 20உ 2—6—65ல் புளியம்பட்டி ஸ்ரீலஸ்ரீ கந்தசுவாமி தலைமையில் கங்காதீர்த்தம் சிவலிங்கம் வைத்து லக்ஷார்சனை செய்து ருமலிங்க சுவாமி கோவிலில் தன் குருநாதன் போட்டோவை வைத்து அபிஷேக ஆராதனைகள் செய்து மிக சிறப்பாக தானும் சந்நியாசம் பெற்று காவியாடை யணிந்தார். இன்னும் எவ்வளவோ நற்காரியங்கள் செய்வார் என்று நினைக்கிறேன்.

இங்ஙனம்

திருப்பூவனம் வேதாந்தமடம்

ஸ்ரீலஸ்ரீ காசிகா நந்த ஞானசாரிய ஸ்வாமிகள்

மாணுக்கர்

உயர் திரு. காவேரி அய்யா அவர்கள்

உ

ஓம்·தத்·சத்.

பரப்பிரஹ்மணே நம:

**ஸ்ரீ ஆத்மானந்த பாராயணத் திரட்டு**

திருவிளையாடற் புராண விநாயகர் காப்பு

(1) உள்ளமெனும் கூடத்தில் ஊக்கமெனும்
தரி நிறுவி உருதியாக
தள்ளரிய அன்பென்னும் தொடர்பூட்டி
தருகட் பாச

கள்ள விதபசு போதக் கவளமிடு களித்துண்டு
கருணை யென்னும்
வெள்ள மதம் பொழி சித்திவேழத் தைங்கரனை
நினைந்து வாழ்வாம்

(2) கய முகனடியைக் கந்தனின் தாளைக் கவின்
பெரும் அம்மையின் கழலை
மய லினை நீக்கும் மாண்புடை வீரன் மகிழ்
தரும் மலர் புரையிலை பதத்தை
நய முடை அருணசல முனிதாளை நாள்தோறும்
மனத்திடையுள்ளி
நியமமாய்த் தொழுது நித்தியானந்தம் நிகழ்
தரப் போற்றி வாழ்த்துமே

விக்கினேஸ்பரர் கீர்த்தனை ராகம்-காபி, தாளம்-ஆதி

(3) சுக்கிலாம் பரத நமோ நம
தும்பிக்கை யானை நமோ நம
விக்கினம் தீர்ப்பாய் நமோ நம
வேதப் பொருளே நமோ நம
ஆகுவா கனனே நமோ நம
அம்பிகை பாலா நமோ நம
பாகுடன் பூசை படைப்பேன் நமோ நம
பக்தன் ஆத்மானந்தன் பணியு நமோ நம

முருகன் விருத்தம்

(4) அப்பனே வா வா சண்முகனே வா வா
ஆறு படை வீடுடைய அய்யா நீ வா வா
இப்போ வா இங்கே வா என் முன்னே வா
எளியோரை காத்தருளும் ஏழை பங்கா வா வா

(5) செப்பாத ஞான ரச தெள்ளமுதே வா வா
சிவனுர் மனங்குளிரு தேசிகனே வா வா
எப்போதும் நான் மறையோன் ஏத்துங்
குகா வா வா
எளியோரை காத்தருளும் ஏழை பங்கா வா வா

முருகன் கீர்த்தனை

இராகம்-முகாரு (பல்லவி) தாளம்-ஆதி

(6) வரம் அருள்வாய் முருகா முருகா முருகா
ஒரு கண மாதிலும் உனை மறவாதிருக்க
(வரம் அருள்)

அநுபல்லவி

வள்ளி மணுளா வா வானோர் புகழ் வேலா
புள்ளி மயில் வாகனு புரந்தரி மகிழ் பால
(வரம் அருள்)

சரணம்

சித்தம் தெளிந்திட சீற்றம் கொண்டாடிட
பித்தம் பிறந்திட பேதமை நீங்கிட
தத்தம் தர்மங்கள் தழைத்து ஓங்கிட
நித்தம் நித்தம் உனைத் தேடி நாடிட
(வரம் அருள்)

ஸ்ரீலஸ்ரீ ஞானசம்பந்தர் அருள்வாக்கு

விருத்தம்

(7) உனக்குப் பணி செய்ய
உன் நாமம் எந்நாளும் உரைக்க
எனக்கு வரம் தருவாய்

மனக் கவலை நீக்குகின்ற
தென் மதுரை நின்மலனே
எவ்வுலகு மாக்குகின்ற சொக்கநாதா

(இராகம்: கானடா. (பல்லவி) தாளம்: ஆதி.

8) பாடு பண்ணொடுகூடு பரமனை நாடு
பரவசத்தோடு திருக்கேதார நாதனை
வாயாரவே (பாடு)

(அனுபல்லவி)

பன்னிரு கரத்தானும் பாய்புலிச் சடையானும்
பார்வதி மனமகிழ் பஞ்சமுகத்தானையும் நீ
(பாடு)

(சரணம்)

நினைத்தவை நடந்திடும் நிர்மலன் அருளாலே
நீங்காத துயரெலாம் நீங்கிடும் அவனாலே
நீரணிந்தான் அவன் நெற்றிக்
கண்ணுடையானை
நித்தம்நித்தம் நினைந்து நெஞ்சம்
உருகியே நீ (பாடு)
பண்ணொடு கூடு பரமனை நாடு

காரண பஞ்சாக்ஷரம். திருமூலர்.

(9) சிவ சிவ என்கிலர் தீவினையாளர்
சிவ சிவ என்றிடத் தீவினை மாளும்
சிவ சிவ என்றிடத் தேவருமாவர்
சிவ சிவ என்னச் சிவகதிதானே (3 தடவை)

### சூட்சம பஞ்சாக்ஷரம்

(10) சிவாய நமஓம் சிவாய நமஓம்
சிவாய நமஓம் சிவாய நமஓம்
சிவாய நமஓம் சிவாய நமஹ
என்று பத்துத் தடவை சொல்லவும்.

### தூல பஞ்சாக்ஷரம்

(11) ஓம் நமசிவாய ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய ஓம் சிவாய நமவோம்
என்று பத்துத் தடவை சொல்லவும்.

### இராமலிங்க சுவாமிகள் அருட்பா துதிகள்

(12) வாட்டமிலா மாணிக்க வாசக நின் வாசகத்தைக்
கேட்ட பொழு தங்கிருந்த கீழ் பறவைச்
சாதிகளும்
வேட்ட முறும் பொல்லா விலங்குகளு
மெஞ்ஞான
நாட்டமுறு மென்னிலிங்கு நானடைதல்வியப்
பன்றே

### நடராஜர் கீர்த்தனை

(13) நடுநாடி நடுநாடி நடமாடு பதியே
நடராஜ நடராஜ நடராஜ நிதியே
நடுநாடி யொடுகூடு நலமாடு முருவே
நடராஜ நடராஜ நடராஜ குருவே
நடுநாடி யிடைநாடி யொடுகூடு நலமே
நடராஜ நடராஜ நடராஜ பலமே.

மீனும்பிகையின் பாட்டு (திருவிளையாடல் புராணம்)

(14) பங்கயற்கண்ணறிய பரம்பரம் பொருளே
தனக்குரிய படிவமாகி
யிங்கயற்கண்ணய னுலகமெண்ணிறைந்த
சராசரங்களீன்றுந்தாழாகி
கொங்கையற் கண்மயற் கூந்தல் குமரி
பாண்டியன் மகள் போற்கோலங்கொண்ட
வங்கயற் கண்ணம்மைவிரு பாதப்போதும்
அகத்துள் வைப்பாம்

(15) ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி சங்கராசாரியார் துதி

அம்பா ஸாம்பவி சந்திர மௌளி
ரபலாபர்ணு உமா பார்வதி
காளி ஹைமவதி ஸ்ரீவாத்ரி நயனி
காத் யாயனீ பைரவி
ஸாவித்திரி நவ யௌவனு ஸபகரி
ஸாம் பால்யலக்ஷ் மீப்ரதா
சித்ரூபி பரதேவதா பகவதி
ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி

குற்ருலக் குழல்வாய் மொழியம்மை துதி

(16) தவளமதி தவழ் குடுமிதனி வரையில் முளைத்
தெழுந்த தகைசேர் முட்கட்
பவளமலை தனிலரசை படர்ந்தேறி கொழுந்து
விட்டு பருவமாகி பனிவரையில்

வளிநரை பூங்கடப்ப தாமரையு மீன்றொரு
கோட்டாம்பலீன்ற
குவலயம் பூத்தருள் கொடியை கோதைக்
குழல்வாய் மொழியைக் கூறுதுமே

## சரஸ்வதி துதி

குமரகுருபர சுவாமிகள் அருளியது

(17) மண் கொண்ட வெண்குடைக் கீழாக
மேற்பட்ட மன்னரு மென்
பண் கண்டளவிற் பணியச் செய்
வாய் படைப்போன் முதலாம்
விண்கண்ட தெய்வம் பல்கோடி
யுண்டேனும் விளம்பிலுன்போற்
கண்கண்ட தெய்வ முளதோ
சகல கலா வல்லியே.

## கிருஷ்ண பரமாத்மா துதி

மஹா பாகவதத் திரட்டு

(18) சீர்பூத்த பரஞ்சுடராய்ச் சித்தாகிக்கானலிடை
நீர்பூத்த தெனவுலக நிறைந் தொளிதன்
பாற்றோன்ற
வேர்பூத்த முத்தொழிலுமினிதியற்றித்
தனிநின்ற
கார் பூத்த திருமேனிக் கடவுண் மலரடி
நினைவாம்.

## ஸ்துதிகள்

### சங்கரபகவத் பாதாசாரியார் துதி.

(19) பொங்கருண் ஞான நங்கள் புண்ணியமனைத்து
மொன்ருய்
அங்குபுல்லென்ன வந்தாண்டருமறைப்
பொருளையார்க்கும்:
அங்கையினெல்லிபோல அளித்தருளமலாநந்த
சங்கரபகவற்பாதன்ருண்மலர்நந்தலைக்கே.

### சற்குரு துதி.

(20) சீரசாகரஞ் சிரிதெனக் கருணையிற்சிறந்த
நாரசேகரணருள் கரிமு கன் நமக்குறுஞ்சம்
சாரசாகரந்தணந்திடச் சமிவளந் தனிலாம்
வீர சேகரனை தொழும் அருணசலனைப்
பணிவாம்.

(21) தவமுனிவர்கடொழு தரு வனமுனிவர
வவமதி லுறு மெனையசை வர நின திரு
பவமறு பதமுறும் படியறுளுதியால்
சிவகுரு சிவகுரு சிவகுரு சிவமே

### நூற்பயன்

(22) கற்பிதமாம் பேத மெலாம் போக்கு மிந்நூல்
களங் மிலாப் பரப்பிரம மாக்கு மிந்நூல்
நிற்பயமா நிட்டையினையளிக்கு மிந்நூல்
நிரதிசயா நந்தத்தை நல்குமிந்நூல்
அற்புதமா மிந்நூலி னனுபவங்கள்
அறிந்தவர்கள் பரம சுகஞானியாவர்
பற்பலவா நூலையெல்லாம் விட்டிந் நூலைப்
பரிவுடனே முமுட்சு வெலாம் பார்க்கவேண்டும்

ஞானிகளின் பெருமை

(23) அகர மாயிர மந்தணர் கீயிலென்
சிகர மாயிரஞ் செய்து முடிக்கிலென்
பகரு ஞானி பக லூண் பலத்துக்கு
நிகரிலை யென்பது நிச்சயந்தானே

(24) ஞால முண்டவன் தலைமிசை சுமப்பன் மெய்ஞ்
ஞானி வேண்டுவதெல்லாம்
ஆலமுண்டவன் அவன் பின்னே திரிகுவன்
அவனடித்துகட் கன்றே
சீல மன்னரு மற்றுள தேவருந்
திசை திசை பணிந் தேற்றக்
காலிரண்டையுந் தலைமிசை வையெனக்
கழலுவன் கமலத் தோன்.

தேவாரம்

திருஞானசம்பந்த சுவாமிகளருளியது

(25) ஊணிலுயிர்ப்பை யொடுக்கி யொண்சுடர்
ஞான விளக்கினை யேற்று நன்புலத்
தேனை வழிதிறந் தேத்து வார்க்கிட
ரான கெடுப்பன அஞ்செழுத்துமே.

(26) விடங்கொணுகமால் வரையை சுற்றி
விரிதிரை நீர் கடைந்த நஞ்சை உண்ட
காரணமென்னகோல மிடந்து மண்ணையுண்ட
மாலும்—மின்மலர்மேலயனும் தொடர்ந்து
முன்னம் காணுமாட்டாச் சேறுபுரமேவியவனே.

திருநாவுக்கரசு சுவாமிகளருளியது.

(27) உடம்பெனுமனையகத்தி னுள்ளமே தகளியாக
மடம்படுமுணர்நெய்யட்டி யுயிரெனுந்திரிமயக்கி
யிடம்படுஞானத் தீயாலெரிகொளவிருந்து
நோக்கிற்
கடம்பமர்காளை தாதை கழலடி காணலாமே.
எவரேனுந்தமராக விலாடத்திட்ட திருநீறுஞ்
சாதனமுங் கண்டாலுள்கி
யுவராதேயவரவரைக் கண்டபோதுவுகந்தடிமை
திறநினைந்தங்கு வந்துநோக்கி
யிவர்தேவரவர் தேவரென்று சொல்லி
யிரண்டாட்டி—தொழிந்தீசன் றிறமே பேணிக்
கவராதே தொழுமடியார் நெஞ்சினுள்ளே
கன்ருப்பூர்—நடுதறியைக் காணலாமே.

திருச்சிற்றம்பலம்.

திருவாசகம். கோயின்மூத்த திருப்பதிகம்.

(28) உடையாளுன் றனடுவிருக்கும் உடையாள்
நடுவுள் நீயிருத்தி
அடியேன்டுவுளிருவீருமிருப்பதானலடியேனுன்
அடியார் நடுவிலிருக்குமருளைப்புரியாய்
பொன்னம்பலத்தெம்
முடியாமுதலேயென்கருத்து முடியுவண்ண
முன்னின்றே.
முன்னின்ருண்டாயெனை முன்னமியானு
மதுவே முயல்வுற்றுப்
பின்னின்றேவல் செய்கின்றேன் பிற்பட்டொ
ழிந்தேன் பெம்மானே

என்னின்னிறருளிவரநின்று போந்திடென்னு
விடிலடியார்
உன்னின்றிவனுரென்ருரோ பொன்னம்பலக்
கூத்துகந்தானே.

நால்வர் துதி.

(29) வெங்குருவிற்சற்குரு வாயுதித்துக் கூடன் மீன
வன்மேல்
வினைதீர்த்தோன் விரைத்தாட்போற்றி
துங்கமுறுமலை கடலிற்சிலையதான தோணியில்
வந்தவன்பாததுளி போற்றி
எங்கள் பிரான்றனையிருளிற்பரவை வாசற்
கேவல்கொண்டான்பதப்பதுமவிருதாள்
போற்றி
புங்கவர்சூழ் திருவாதவூரில்வந்த புண்ணியனு
ரிணையடிகள் போற்றி போற்றி.

நால்வர் மகிமை

சம்பந்தர்

(30) புனலிலேலெதிர் செல்லெனச் செல்லுமே
புத்தனுர்தலை தத்தெனத்தத்துமே
கனலிலேடிடப்பச்செனறிருக்குமே
கதவுமாமறைக் காட்டிலடைக்குமே
பனையிலாண்பனை பெண்பனையாகுமே
பழயவெண்டிபொற் பாவையதாகுமே
சினவராவிடந் தீரெனத் தீருமே
சிறந்த சம்பந்தர் செந்தமிழ்ப் பாடலே

அப்பர்

(31) தலைகொணஞ்சமுதாக விளையுமே
தழலினீறுதடாகமதாகுமே
கொலைசெயானை குனிந்துபணியுமே
கூரராவிடந்தீரெனத் தீருமே.
கலைகொள் வேத வனப்பதி தன்னுளே
கதவு மீண்டு கடுகத் திறக்குமே
அலைகொள் வாரியிற் கல்லு மிதக்குமே
அப்பர் போற்று மருந் தமிழ்ப் பாடலே.

சுந்தரர்

(32) வெங்க ராவுண்ட பிள்ளையை நல்குமே
வெள்ளை வாரண மீதிலிருத்துமே
மங்கை பாகரைத் தூதுநடத்துமே
மருவியாறு வழிவிட்டு நிற்குமே
செங்கலானது தங்கமதாகுமே
திகழு மாற்றிட்ட செம்பொன்னளிக்குமே
துங்கவாம் பரிசேரற்கு நல்குமே
துலங்கு நாவலூர்ச் சுந்தரர் பாடலே.

வாதவூரார்

(33) பெருகும் வையை தனை யழைப்பிக்குமே
பிரம்படிக்குப் பிரான்மேனி கன்றுமே
நரியெலாம் பரியாக நடத்துமே
நாடி மூகைதனைப் பேசுவிக்குமே
பரிவிற் பிட்டுக்கு மண் சுமப்பிக்குமே
பரமனே டெழுதக் கோவை பாடுமே
வருகும் புத்தரை வாதினில் வெல்லுமே
வாதவூரர் வழங்கிய பாடலே.

## சேக்கிழார் அருளிய பெரிய புராணம்

(34) உலகெலாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியனம் பலத் தாடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்
கொண்டுவந்து மனைப் புகுந்து குலாவு பாதம்
விளக்கியே
மண்டு காதலினு தனத்திடை வைத்தருச்சனை
செய்தபின்
உண்டி நாலு விதத்திலாலு சுவைத்
திறத்தினி லொப்பிலா
அண்டர் நாயகர் தொண்டரிச்சை யிலமுது
செய்ய அளித்துளார்

## திருவிசைப்பா

(35) ஒளி வளர் விளக்கே யுலப்பிலா வொன்றே
யுணர்வு சூழ் கடந்ததோ ருணர்வே
தெளி வளர் பளிங்கின் றிரண் மணிக்குன்றே
சித்தத் துட்டித் திக்குந் தேனே
யளி வளருள்ளத் தானந்தக் கனியே
யம்பல மாடரங்காக
வெளிவளர் தெய்வக் கூத்து கந்தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே.

## திருப்பல்லாண்டு

(36) புரந்தரன் மாலயன் பூசலிட்டோல மிட்
டின்னம் புகலரிதா
யிரந்திரந் தழைப்பவென்று யிராண்டவர்
கென்செயவல்ல மென்றுங்

கரந்துங் கரவாத கற்பகனுகிக்
கரையில் கருணைக் கடல்
பரந்து நிரந்தும் வரம்பிலாப் பாங்கற்கே
பல்லாண்டு கூறுவதுமே

தேவபூசை

(37) தீவினையெல்லாமறுத்து மங்கலமெல்
லாமுதவுந் தேவபூசை
யாவதெனக் கேட்டலுமே யருள்செய்வான்
தெய்வந்தான் யாதென்றேதிற்
கேவலமே யரியல்ல வரனல்ல
பூதவுடற் கிடைத்ததல்ல
வோவு மனமன்றடியு முடிவுமிலாச்
செயப்படா வுணர்வே தெய்வம்

(38) பாசமின்றி யுள்ளுணர்வைப் பதினெங்கடிகைபூ
சிக்கி
விராசசூய விலக்க நிகரில்லாரெருரு நாலர்ச்
சிக்கி
லாசிலாத பரவெளியி லமரலாகு மிதுதானே
யேசில் பரமயோக மிதுதானே பரமகிரியையுமே

நிஷ்டானுபூதி

(39) ஆதனத்திருந்தே சாதனைபுரிந்தா
வட்கிடாப் பொறிபுல னடங்கும்
ஆதனத்திருந்தே சாதனைபுரிந்தா
லடங்கிடு மனே விடயங்கள்
ஆதனத்திருந்தே சாதனைபுரிந்தா
லறிவறியாமைக ளொழியும்
ஆதனத்திருந்தே சாதனைபுரிந்தா
லகண்ட வீட்டைவது நிசமே.

## தாயுமான சுவாமிகள்

(40) நடக்கினு மோடினு நிற்கினும் வேறொரு
நாட்டமின்றிக்
கிடக்கினுஞ் செவ்விதிருக்கினு நல்லருட்
கேள்வியிலே
தொடக்குமென்னெஞ்ச வனமற்ற பூரணத்
தொட்டிக்குளே
முடக்குவன்யான் பரமானந்த நித்திரை
மூடிடுமே

(41) சும்மாவிருக்கச் சுகஞ்சுகமென்று சுருதி
யெல்லாம்
அம்மா நிரந்தரஞ் சொல்லவுங் கேட்டு
மறிவின்றியே
பெம்மான்மௌனி மொழியையுந் தப்பியென்
பேதமையால்
வெம்மாயக் காட்டிலலைந்தே னந்தோவென்
விதிவசமே

(42) நீங்காச் சிவயோக நித்திரை கொண்டேயிருந்து
தேங்காக் கருணைவெள்ள நதேக்குவது
மெக்காலம்

## விவேக சூடாமணி

ஸ்ரீ சங்கராச்சாரியார் அருளிய

விவேக சூடாமணி

(43) எவ்வினையகலே முன்னமியாவரும் பூசை செய்து
தவ்வறத் தங்களிட்டம் தரணியிற்று மடைந்தார்
செவ்விய கருணை கூர்ந்த சிவனருள் குமரனை
யெவ்வினையகலே யென்று மத்தி னுளனு சந்திப்பாம்